## வெளி

வெளியின் சார்பில் ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு மாவட்டத் தலைநகரில் அந்த ஆண்டின் சிறந்த நாடகங்கள் கொண்ட ஒரு நாடக விழாவை நடத்த தீர்மானிக்கப் பட்டுள்ளது. வியாபார ரீதியில் அல்லாத மாற்று நாடகங்களை நடத்தும் குழுக்கள் விழாவில் பங்குபெறும்.

இந்த வருடம் அக்டோபர் 17, 18, 19 தேதிகளில் (விடுமுறை நாட்கள்) திருச்சியில் நாடக விழா நடத்த ஏற்பாடாகியுள்ளது. விழாவில் இடம்பெறும் நாடகங்களும், பங்குபெறும் குழுக்களும் வருமாறு :

1. நிரபராதிகளின் காலம் —கூத்துப்பட்டறை. சென்னை.
2. வெறியாட்டம் —பேராசிரியர் ராமானுஜம், தஞ்சை பல்கலைக்கழகம்
3. சூரியனின் கடைசிக் கிரணத்திலிருந்து முதல் கிரணம் வரை —அரங்கம், தஞ்சை
4. கருஞ்சுழி —தலைக்கோல், பாண்டிச்சேரி
5. நடுக்கடலில் —நாடகப் பள்ளி மாணவர்கள், பாண்டிச்சேரி
6. அமைதி! கோர்ட் நடந்து கொண்டிருக்கிறது —ஒத்திகை, மதுரை
7. ஹயவதனா —திருச்சி நாடக சங்கம்

ஒரு நாளைக்கு இரண்டு நாடகங்கள் வீதம் மாலையில் நாடகங்களும் மறுநாள் காலை அவை பற்றிய விவாதங்களுமாக நிகழ்ச்சி மூன்று நாட்கள் நடைபெறும். மாற்று நாடகங்களை பரவலான வாசகர்களிடையே அறிமுகப்படுத்தவும், நாடகக் குழுக்களிடையே செழுமையான கருத்துப் பரிமாறல்களை உருவாக்கவும், அந்தந்த பகுதிகளில் இயங்கும் குழுக்கள் தொடர்ந்த நாடகங்களுக்கான உத்வேகம் பெறவும் நாடக விழா உதவும் என்று நம்புகிறேன். நாடக ஆர்வலர்கள் அனைவரையும் பங்கு கொள்ளும்படி அழைக்கிறேன். திருச்சி நாடகசங்கமும், வெளியும் இணைந்து இந்த விழாவை நடத்துகிறது. நாடகங்களில் சிறிது மாற்றம் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. நாடகம் நடைபெறும் இடம் மற்றும் விவரங்களுக்கு தொடர்புகொள்ள வேண்டிய முகவரி : திருச்சி நாடக சங்கம். 12A விநாயகபுரம், தென்னூர் ஹைரோடு, தென்னூர், திருச்சி-17 போன் : 24199

---

இந்த இதழுடன் வெளி ஓராண்டு நிறைவடைகிறது. ஓராண்டு நன்கொடை செலுத்தியவர்கள் புதுப்பித்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

---

தொடர்புக்கு: 1415, 2வது தெரு, முதல்செக்டார், கே.கே நகர், சென்னை-78
வெளியிடுபவர் : தேன்மொழி, ஆசிரியர்: ரெங்கராஜன். தனிச்சுற்றுக்கு மட்டு
தனி இதழ் நன்கொடை ரு. 6/- ஆண்டு நன்கொடை ரு. 35/-

அச்சு : கிளாரா பிரிண்டர்ஸ், சென்னை-29

○ சரஸ்வதி ராம்நாத்

இந்தி மொழி நாடக வரலாற்றை அதன் முதல் காலகட்டத்திலிருந்து அதாவது பாரதேந்து ஹரிச்சந்தராவின் படைப்புகளிலிருந்து துவங்காமல் நாடு சுதந்திரம் பெற்ற காலகட்டத்திலிருந்து துவங்கலாம் என்று நினைக்கிறேன். இரண்டாம் உலகப்போரின் காலத்திலேயே 'இப்டா'—மற்றும் பிருத்விராஜ்கபூரின் நாடகக் குழுவினர்களின் பெரும் முயற்சியின் மூலம், புராண, இதிகாச மற்றும் பார்ஸி நாடகங்களின் தாக்கம் குறைய ஆரம்பித்து, நாடகம் பற்றி, அதுவும் மேடை நாடகங்கள் பற்றியவொரு புதிய விழிப்புணர்வு தோன்றத் துவங்கியது. ஐம்பது களுக்கு முன்னரே நாட்டில் காந்தி அடிகளின் இயக்கத்தின் மூலம் சமுதாய சீர்திருத்த உணர்வு, தேசப்பற்று, சுதந்திரதாகம் போன்றஉணர்வுகள் தீவிர மடைந்து, கலை இலக்கியங்களில் மறுமலர்ச்சியைத் தோற்றுவித்திருந்தது. இம்மறு மலர்ச்சி நாடகத் துறையிலும் எட்டிப் பார்க்கத் தவறவில்லை நாடகங்கள் பலவும் எழுதப்பட்டு வாசகர்களால் விரும்பிப் படிக்கப்பட்டன எனினும் நாடக மேடை யைப் பற்றிய நுணுக்கங்கள், உத்திகளைப் பற்றி அவற்றில் கவனிக்கப்படவில்லை. பொழுது போக்கிற்காக எழுதப்பட்ட சிருங்கார ரசம், ஹாஸ்யம் என்ற பெயரில், மலினமான ரசனையை வெளிப்படுத்திய நாடகங்கள், பாடபுத்தகங்களான நாடகங் கள் - போன்றவைகளின் தளைகளிலிருந்து விடுபட்டு படைப்பாற்றல் மிகுந்த புதிய நாடகாசிரியர்கள் அரங்கில் தோன்றினர். இவர்களுக்கு நாடு, சமுதாயம் பற்றி அக்கறை இருந்தது. தங்கள்முன் நின்ற பிரச்சினைகள் இவர்களின் கவனத் தைக் கவர்ந்தன.

இவர்களில் உபேந்திரநாத் அஷ்க், ஜகதீஷ்சந்திர மாதுர் இருவரையும் நவீன இந்தி நாடகத்தின் முன்னோடிகள் எனக் கூறலாம். அஷ்க்கின் நாடகங்கள் எளிமையானவை. ஜனரஞ்சகமானவை எனினும் மலினமானவை அல்ல. அன்றாட வாழ்வில் நாம் சந்திக்கும் மனிதர்கள் தான் பெரும்பாலும் அவரது நாடகங்களின் கதாபாத்திரங்கள். தனி மனிதன், குடும்பம், சமூக வாழ்வு இவற்றின் அன்றாட பிரச்சினைகளை நாடகங்கள் மூலம் முன்வைத்தார். இவர் நிறைய ஓரங்க நாடகங்கள், நாடகங்ளை படைத்துள்ளார். மனிதாபிமான உணர்வை தூண்டி விடக் கூடிய இவரது படைப்புகள் வாசகர்களை பெரிதும் கவர்ந்தன. அவரது பாத்திரங்களில் வாசகர்களால், பார்வையாளர்களால் தங்களை இனம் கண்டு கொள்ளமுடியும். ஏனெனில் பாத்திரங்கள் சராசரி மனிதர்கள்.

ஜகதீஷ்சந்திரமாதுரின் நாடகங்கள் கலைநயமும் கொண்டவை. 'பஹ்லே ராஜா' 'கோணார்க்', 'சாரதியா'—நல்ல நாடகங்கள். சரித்திரகாலப் பின்னணியைக் கொண்டிருந்தாலும் ரொமாண்டிக் நாடகங்கள் அல்ல. ஒரு தனி மனிதன் அவன் அரசனாகவோ பிரதானியாகவோ இருந்தாலும், அவனது ஆசை, விருப்பம்,

ஆர்வத்தின் மூன், சமுதாயமும் தனி மனித வாழ்வும், நியாயங்களும் எவ்வாறு நசுக்கப்படுகின்றன என்பதையும் இவ்விரு சக்திகளின் முரணான போக்குகளிடையே ஏற்படும் மோதல்களையும், மனப் போராட்டங்களையும் அலசியுள்ளார். மாதுர் சிறந்ததொரு நாடகாசிரியர். 1953ல் தர்மவீர் பாரதியின் 'அந்தா யுக்' 1957ல் மோகன் ராகேஷின் 'ஆஷாட் கா ஏக் தின்' இரண்டுமே பலராலும் புகழ்ந்து பாராட்டப்பட்ட நாடகங்கள்.

இந்தி மொழி நாடக இலக்கியத்திலும், நாடக அரங்கத்திலும் இவ்விரு நாடகாசிரியர்களும் தங்களது தனிப்பட்ட, வலுவானதொரு முத்திரையைப் பதித்தனர். அந்தாயுக் காவிய நாடகம் நடை அழகு, கருத்தாழம் இரண்டும் ஒருங்கே கொண்டது. மகாபாரதப் போரின் கடைசி சில நாட்களைப் பின்புலனாகக் கொண்டது எனினும் புராண நாடகங்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. இரண்டாம் உலகப் போரின் விளைவாக ஏற்பட்ட பயங்கரமான படுநாசம், அதற்குப்பின் வல்லரசுகளிடையே உருவான பனிப்போரின் பின் விளைவுகள், பாதிப்புகளை இந்நாடகம் தன்னுள்ளே கொண்டிருக்கிறது. வெற்றி பெறுகிறவன், தோல்வியுற்றவன், இருபக்கத்திலும் மனிதத் தன்மை எவ்வாறு உருக்குலைந்து தன்னையே இழந்து விடுகிறதென்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார். ஒழுக்கம், சீலம் பற்றிய மதிப்பீடுகள் அழிந்து, மனிதஉறவுகள் திரிந்து மிருகத்தன்மையை நோக்கி விரைகின்றது என்பதையும் உணர்த்துகிறார். இந்நாடகத்தின் வடிவமைப்பு, கலைத்தன்மையுடன் புதிய உத்திகள் மூலம் பாத்திரங்கள் தங்கள் மனநிலைகளை வெளிப்படுத்துவதும் பாராட்டுதலுக்குரியது. இந்நாடகத்தில் கிரேக்க, சமஸ்கிருத நாடகங்களின் லேசான பாதிப்பும் உண்டு. பண்டைக்கால நாடக மரபுகளையும் ஓரளவு நாடகாசிரியர் பின்பற்றியுள்ளார் எனினும் வடிவம் புதுமையானதாக இருந்தது.

மோகன் ராகேஷின் நாடகமான ''ஆஷாட்கா ஏக்தின்'' மகாகவி காளிதாசனின் வாழ்க்கைப்பற்றிய, கர்ண பரம்பரைக் கதைகளை ஆதாரமாகக்கொண்டு புனையப்பட்ட சிறந்ததொரு நாடகம். முற்றிலும் யதார்த்தமான தளத்தில் சரித்திரகாலப் பாத்திரங்களை நிறுத்தி, மனோதத்துவ ரீதியில் அவர்களுக்கு வடிவம் தந்துள்ளார். பாத்திரப் படைப்பும், வசனமும், காட்சி அமைப்பும் சிறப்பானவை. (இவரைப்பற்றி 'வெளி'யில் தனிக் கட்டுரை வந்திருப்பதால் அதிகம் எழுத விரும்பவில்லை.) இவர் நாடகத் துறையில் பல புதிய பரிணாமங்களைக் காணவிழைந்தார், புதிய சோதனை முயற்சிகளைச் செய்து ஓரளவு வெற்றியும் பெற்றார். 'த்வனி நாடகம்', 'பீஜ நாடகம்' போன்றவை அவை. இவரது நாடகங்கள், ஓரங்க நாடகங்களின் தொகுப்புகள் பல வெளியாகியுள்ளன. இவரது நாடகங்கள் தங்களது இலக்கியத் தன்மை இழந்துவிடாமல் அதே சமயத்தில் மக்களுக்குப் புரியக் கூடியதாகவும், அவர்களது சிந்தனையைத் தூண்டுவதாகவும் இருந்தது. நாடக அரங்குக்கு ஏற்ற முறையில் எழுதப்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கது.

அறுபதுகளில் இப்ராஹீம் அல்காஜி, சத்ய தேவ் தூபே, சியாமாநந்த் ஜாலான் போன்ற இயக்குனர்கள், நாடகங்களை மக்களிடையே இட்டுச் சென்று அவர்களது கவனத்தைக் கவர முயற்சித்தனர். நாடகம் என்பது வெறும் பொழுதுபோக்கு மட்டுமல்ல, சிந்திக்க வைக்கவும் கூடியது என்பதை இவர்கள் உணர்த்த முயன்றனர். ஒரு நாடகத்தை சிறந்ததொரு கலைப்படைப்பாக, டெக்னிகலாகவும், குறியீட்டு உத்திகள், படிமங்கள் மூலமாகவும் உருவாக்குவதுதான் நவீன நாடகம் என்பதை இவர்கள் ஏற்கவில்லை. இவர்களது இயக்கத்தில் உருவான நாடகங்களில் கலை வடிவத்திற்கும் உத்திக்கும் புதுமையான வடிவங்களை அளித்தாலும் பார்வையாளர்களுக்கு அது புரியும்படியாக இருப்பதை கருத்தில் கொண்டனர். இலக்கியமென்பது வாழ்க்கை விமர்சனம் என்பதுபோல, இலக்கியத்தின் ஒரு அம்சமான நாடகமும் வாழ்க்கையின் விமர்சனம்தான் என்பதை அறுபது, எழுபதுகளில் தோன்றிய நாடகாசிரியர்கள் நம்பினார்கள் என்பது அக்காலத்தில் வெளிவந்துள்ள நாடகங்களை படிக்கும்போது ஏற்படுகின்றது.

நாடக இலக்கியத்தில் புதியதொரு உத்வேகமும் கண்ணோட்டமும் ஏற்பட அக்கால அரசியல், சமுதாய சூழ்நிலைகளும் காரணமாக இருந்தன. யதார்த்தவாதத்தின் அடிப்படையில், இடதுசாரிக் கொள்கைகளின் பாதிப்பில், சமகால வாழ்வை, அதன் ஏற்றத்தாழ்வுகளை, தனிமனித வாழ்வின் அவலங்களைக்கூட நாடகங்கள் சித்தரித்தன. அத்தகைய நாடகங்களின் பட்டியல் நீண்டதாகும். அமிருதலால் நாகர், கமலேஷ்வர், ராம்குமார்வர்மா, ராமவிருஷபேனிபுரி, சந்திரகுப்த வித்யாலங்கார், அமிருதநகாதா, டாக்டர் லக்ஷ்மிநாராயண்லால், விஷ்ணுபிரபாகர், ராமேஷ்வர், பிரேம்மணிமதுகர், பல்வந்த்கார்கி, மனுபண்டாரி, மிருணாள்பாண்டே, சந்திரேஷ், ஜிதேந்திரபாடியா போன்ற நாடகாசிரியர்களின் பங்கு இந்தி நாடக இலக்கிய வளர்ச்சியில் கணிசமானது.

இவர்களின் நாடகங்களில், அரசியல் மாற்றங்கள், ஆதிக்கங்கள், ஒழுக்கச்சிதைவு, வக்கிரமான பாலியல் உறவு, சமுதாய சீர்கேடுகள், பதவி, அதிகார ஆசைகள், தொழிலாளிகளின் போராட்டங்கள், வர்க்க பேதங்களால் ஏற்படும் விளைவுகள் மாறுபட்ட சூழலில், மாறிவரும் ஆண், பெண் உறவுகள், மன இறுக்கங்கள், திருமண முறிவுகள், எனப் பல்வேறு பிரச்சினைகளும், எடுத்தாளப்பட்டுள்ளன. இவற்றில் சிலவற்றில் கருத்துக்கள் ஆழமானதாக உள்ளன. சிலவற்றில் மேம்போக்கான புரட்சியின் கூக்குரல் கேட்கிறது. நாடக மேடையிலும் புதிய மாற்றங்கள் ஏற்பட்டன. காட்சிப் படிமங்களை அமைப்பதிலும், பாடல்கள், கோரஸ் ஒலிகளை ஒலிக்கச் செய்வதிலும், பாத்திரப் படைப்பிலும் அரங்கப் பின்னணியிலும் அதிகமான கவனம் செலுத்தப்பட்டது. நௌடங்கி, தெருக்கூத்து பாணிகளை ஓரளவு தன்னுள்ளே கொண்ட நாடகங்களும் அரங்கேற்றப்பட்டன, எனினும் இந்தி பேசும் மாநிலங்களில் நாடகமேடைகளுக்கு பரவலான, கட்டுக்கோப்பான அமைப்புகளோ இயக்கங்களோ இல்லை. மக்களிடையேயும் நாடகத்தின்பால் விசேஷமான

...யா இல்லை. நாடகக் குழுக்கள், திறமையாக செயல்பட்டு, நல்ல இலக்கியத்தரமான, சிறந்த கருத்துக்களுடைய நாடகங்களை மக்களின் முன்னே வைக்கவில்லை. நகரங்களில் மட்டுமே கலைப்பற்றும் நாடக ஆர்வமும் கொண்டுள்ள ஒரு சில குழுக்கள் இயங்கி வருகின்றன என்பதும் கவனத்திற்குரியது.

எண்பதுகளில் நாடகங்களில் கலை அம்சத்திற்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டது. உருவம், உத்தி, டெக்னிக், காட்சி அமைப்பு, அரங்கமேடை ஆகியவற்றில் கவனம் செலுத்தியதுபோல் நாடகத்தின் கலை வடிவத்திற்கும் அதிக முக்கியத்துவம் தரப்பட்டது. கலைவடிவம் என்பது அதீதமானதாகவோ, யதார்த்தத்தின் இயல்பிற்கு மாறானதாகவோ இருப்பின், அது மக்களை விட்டு விலகிச் செல்லும் முயற்சியாகி விடுகிறது என்பதை கலைப்படைப்பாக உருவாக்கிய சில நாடகங்களின் தோல்வி உணர்த்தியது. பீஷம்சகானியின் நாடகம் 'மாதவி' குறிப்பிடத்தக்கது. இப்புராண நாடகத்தின் மூலம் ஆண் ஆதிக்கம் மிகுந்த சமுதாயத்தில் பெண்ணின் உடலும் உணர்வுகளும், எத்தனை கொடுமையான முறையில் சூறையாடப்படுகிறது என்பதையும் பெண்ணின் ஆக்ரோஷ மிகுந்த எதிர்பபுணர்வையும் நாடகாசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். சங்கர்சேஷ்னி ''கோமல் காந்தார்''-ல் காந்தாரியின் வேதனையும், நந்தகிஷோர் ஆச்சாரியா 'தேஹான்நதர்' எனும் தன் நாடகத்தில் சர்மிஷ்டாவின் மனநிலையையும், இதே நோக்கில் எடுத்துக் காட்டியுள்ளனர். தூத்நாத்சிங்கின் படைப்பான 'யமகாதா'வின் புரூருவா—ஊர்வசியின் காதலும் உறவும் அக்காலத்திய வர்க்க மோதல்களைக் காட்டுகிறது. வர்க்கப் போராட்டமும், உயர்வு தாழ்வுகளும் இன்றல்ல, என்றென்றும் மானிட சமுதாயத்தில் நிலவும் சத்தியங்கள் என்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டுகிறார். இந்நான்கு நாடகங்களும் புராணக் கதைகளை அடிப்படையாகக் கொண்டவை எனினும், யதார்த்தத்திற்கு புறம்பானவை அல்ல. பாத்திரங்களின் மனநிலை, உணர்ச்சிக் கொந்தளிப்புகள், யாவும் கருத்தாழம் மிக்க வசனங்களுடன் ஒருங்கிணைந்த நாடகத் தன்மையினால், வடிவ அமைப்பினால் வெற்றிகரமான படைப்புகளாக உருவாகியுள்ளன. சரித்திர நாடகங்களான ராமகிருஷ்ணபேனிபுரியின் 'அம்பாலி' சந்திரகுப்த வித்யாலங்காரின் 'அசோகன்' சுதர்ஷனின் 'சிகந்தர்', மனுபண்டாரியின் 'மகாபோஜ்' மற்றும் ராம்குமார் வர்மாவின் நாடகங்கள் பரவலான பாராட்டுகளைப் பெற்றன. ஷேக்ஸ்பியர், மோலியர், இப்சன் போன்ற பல மேலைநாட்டு நாடகாசிரியர்களின் நாடகங்கள் இந்தியில் நிறைய வெளிவந்துள்ளன. இவற்றில் இந்தியின் மாபெரும் கவிஞரான டாக்டர் பச்சன், ஷேக்ஸ்பியரின் நாடகங்களை வித்துவ மிகுந்த நடையில் மூலத்தின் சுவைகுன்றாது மொழி பெயர்த்துள்ளது பாராட்டுதலுக்குரியதாகும். இந்தி மொழியில் ஏனைய இந்திய மொழிநாடகங்கள் பலவும் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டுள்ளன. திரு. ராஜமன்னாரின் நாடகம் 'மனோரமா' தமிழ் நாடகம் இந்தியில் வெளிவந்துள்ளது. சமஸ்கிருத நாடகங்கள் பலவும் இந்தி வடிவம் பெற்றுள்ளன.

நாட்டின் பிரிவினையினால் ஏற்பட்ட அவலத்தை, மக்களது துன்பத்தை, குறுகிய மதப்பற்றைச் சாடும் நாடகங்களில் அலக்ஹூஜேசேன், லலிதமோகன் தபல்யால், நாடகங்களைக் குறிப்பிடலாம். நாடகம் படிப்பவர்கள், பார்வையாளர்கள் இருவருக்கும் திருப்தி அளிக்கும் வகையில் எழுதப்பட்ட நாடகங்கள் குறைவுதான். லக்ஷ்மிநாராயண்லாலின் 'காக்டெஸ்', 'வியக்திகத்', மணிமதுகரின் 'ரசகந்தர்வ', முத்திரா ராக்ஷசனின் Yours Faithfully, சர்வேஸ்வர் தயாலின் 'பக்ரி' முதலியவை புதிய தளத்தை அமைத்தன அறுபதுகளில், மிருணாள்பாண்டேயின் 'ஜோராம்ரசிராகர்', திரிபுராரிசர்மாவின் 'காட்கிகாடி', விவேகானந்தின் 'அந்ததஹூ' ஆகியவற்றில் கிராமிய வட்டார மொழிகள் இடம் பெற்றன. இது புதிய முயற்சியாக பாராட்டப்பட்டது. ஹபீப் தன்வீரின் 'சரண்தாஸ் சோர்' பிரத்தேயகக் கவனம் பெற்றது.

சுரேந்திர வர்மா, ஜிதேந்திரமித்தல்லின் நாடகங்கள் தனி சிறப்பு பெற்று, நாடகாசாரியரின் தனித் தன்மையை, கலாபூர்வமான நாடகத்தை வடிவமைப்பதில் அவருக்குள்ள ஆற்றலை வெளிப்படுத்தின. இதைத் தொடர்ந்து பல நாடகங்களில் கலாபூர்வமான வடிவம் என்ற பெயரில் யதார்த்தத்திற்கு புறம்பான உத்திகள், புதுமையென்ற பெயரில் புகுத்தப்பட்டன. கட்டியங்காரன் தோன்றி கதைசொல்லும் பாணி, ஒரே பாத்திரம் மேடையில் தோன்றி, பல பாத்திரங்களாக நடிப்பது, ஒரே காட்சியில் மாற்றம் ஏதுமில்லாமல் நாடகம் முழுவதும் நடத்திச் செல்லுவது போன்ற பலவும் புகுத்தப்பட்டன.

சுரேந்திர வர்மாவின் 'ஏக் தூளி ஏக்' என்ற நாடகத்தைப் பற்றி கொஞ்சம் கூற விரும்புகிறேன். இவர் தமிழுக்கு பரிச்சயமானவர். இவரது நாடகமான 'சூரியனின் கடைசிக் கிரணத்திலிருந்து முதல் கிரணம் வரை' என்ற நாடகம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு 'அரங்க'த்தில் நாடகமாகவும் நடிக்கப்பட்டுள்ளது. 'ஏக் தூளி ஏக்' நாடகம் பலராலும் பேசப்படுகிறது.

இந்நாடகம் பதினாலு காட்சிகளைக் கொண்டது (a story of a man who is self cented and with split personality) அரங்கிலே இரு பிரிவுகள். மனிதனிருக்கும் பகுதியில் டெலிபோன், டேப்ரிகார்டர், கம்ப்யூட்டர், டேபிள்லாம்ப் போன்ற சகல நவீன வசதிகள். பெண் பாத்திரம் இருக்கும் பகுதியில் மேஜை, சோபா, ஃபோன், மலர்க்கிண்ணம், சமையலறை (திரையில்) இந்நாடகத்தில் இரண்டே பாத்திரங்கள் ஆண்-பெண். ஏனைய பாத்திரங்களின் குரல்மட்டும் கேட்கலாம் பெண் வேலைக்கு போகிறவள். ஆண், ஆதிக்கவெறி கொண்டவன். இவர்களின் பரஸ்பர முரண்பட்ட கருத்துக்கள், மோதல்கள், வெறுப்பு விருப்புகள், மூலம் ஆண் பெண் உறவுகளைப் பற்றி அலசி ஆராய்கின்றார் ஆசிரியர். ஆணிற்கும் பெண்ணிற்குமிடையே அழியாத உறுதியான நிலையான உறவு சாத்தியமில்லை திருமணத்தின் பொருள் சாவு, அழிவு, உடல் ரீதியான மரணமாக இல்லாவிடினும்-ஆத்ம ரீதியான

தனிப்பட்ட எண்ணங்களின் அழிவுதான் திருமணம் என்கிறார் நாடகாசிரியர். தனது இக்கருத்தை வலியுறுத்த இந்நாடகத்தில் கதாபாத்திரங்களிடம் நிறைய ஆதாரங்கள் உள்ளன. சர்ச்சைக்குரிய இந்நாடகத்தின் கலை நுட்பம், உத்தி- கம்ப்யூடர் மூலம் இயங்கும் தன்மை, ஒலி, பின்னணி இசை, மேடை அமைப்பு சிறப்பானதாகக் கருதப்படுகிறது. வசன நடையிலும் புதுமைக் கருத்துக்களின் தாக்கம் உள்ளது. 'திரௌபதி', 'எட்டாவது சர்க்கம்', 'சின்ன சையத், பெரிய சையத்' போன்ற நாடகங்களை எழுதிய சுரேந்திரவர்மாவின் இம்முயற்சி—அவரது புதிய எல்லைகளை தேடும் முயற்சி எனலாம்.

இன்றைய இந்தி நாடகங்கள் பெரும்பாலும் யந்திரமயமாகிவிட்ட வாழ்க்கையின் முரண்பாடுகளை, முறிந்துவரும் திருமண உறவுகளை, அழிந்துவிட்ட மனித நேயத்தை, சிதறுண்ட குடும்ப சூழலை தங்கள் நாடகங்களில் சித்தரிக்கின்றனர். முன்னரே கூறியதுபோல் மேடை நாடகங்கள் பரவலாகப்பரவவில்லை. இயக்குனர்களின் பங்குதான் இந்தி நாடகங்களின் மேடையாக்கத்தில் சிறப்பானது எனக் கருதப்படுகிறது. இந்தி நாடக மேடையை இயக்குனர்களின் மேடை என்றுகூட சொல்லலாம். ○

# சூரியனின் அறுபட்ட சிறகுகள்

○ எஸ். ராமகிருஷ்ணன்

## காட்சி-1

திறந்தவெளி. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பக்கத்தில் இருந்து ஆகாசத்தைப் பார்த்தபடியே வருவது. கண்களுக்குமேலே கை வைத்தபடி இடுக்கிய கண்களால் பார்ப்பது. எல்லோரும் ஒரே இடத்தில் வந்து நின்று அண்ணாந்து பார்ப்பது. பின் தலை கவிழ்ந்து கொள்கிறது.

நபர் 1 : நகர்கிறதா பார் சூரியன்.

நபர் 2 : அப்படியேதான் இருக்கிறது...கொஞ்சமும் அது நகர்வதாக காணோம்.

நபர் 3 : ஏன் இப்படியானது...எதையும் பார்க்க முடியவில்லை எரிகிறது கண்கள்... எவ்வளவு பிரகாசம்.

நபர் 4 : உனக்கு மட்டுமல்ல...எல்லோருக்கும்தான்...சூரியன் மறையும் காலத்தை எட்டிவிட்டது போலும்...மறைவதற்கு முன்பு நெடுநாட்கள் எரிந்தே மறையக்கூடும்.

நபர் 5 : முட்டாள்தனமாக பேசாதே... எரிந்து கொண்டேயிருக்கிறது பார்... எப்போது கவிழும் இரவு...சொல்.

நபர் 1 : தெரியவில்லை...தாங்க முடியாதவெயில்.

நபர் 2 : ஆறுநாட்களாயிற்று...இன்னும் இரவு விழவேயில்லை...

நபர் 3 : நடுவானில் சிறகுகள் அறுபட்டு மிதக்கும் பறவைபோல சூரியன்...

நபர் 4 : பேசாதே...குழந்தைகள், பெண்கள் ரோட்டில் வீழ்ந்து கிடக்கிறார்கள்... உறக்கம்போய் குழப்பம் சேர்ந்துவிட்டது.

நபர் 5 : இதைப்பற்றி யோசிக்க யோசிக்க எல்லாமும் குழம்புகிறது. பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஒரு வயசாளிக்கு பைத்தியம் ஏறி...புலம்ப தொடங்கிவிட்டான். குழப்பத்தின் கதிர்களிலிருந்து எவரும் மீளமுடியாது.

நபர் 1 : மேலே பார்...பறவைகள் தட்டளிவதை...

நபர் 2 : சுருண்டு விழுகின்றன. அவைகளால் பறக்க முடியவில்லை.

நபர் 3 : சிறகுகளின் ஒலி எல்லா திசைகளிலும் மெல்ல முயங்குகிறது.

நபர் 4 : என்ன செய்கிறார்கள் அவர்கள்...எதைக் கொண்டாவது அந்த பாழாய் போன சூரியனை மறைத்தால் என்ன.

நபர் 5 : எப்படி மறைப்பது... எங்கிருந்து மறைப்பது.

நபர் 1 : எவர் வீட்டு கூரையிலிருந்தும் மறைக்கமுடியாது அதை.

நபர் 2 : மூடிக்கொள் கண்களை.

நபர் 3 : அலை அலையாய் மிதக்கும் வெக்கையை பார்...

நபர் 4 : இப்படியே அழியவேண்டியதுதானா...?

நபர் 5 : உடம்பெல்லாம் உப்பு படர்ந்ததுபோல் ஆனது... எரிகிறது.

நபர் 1 : கத்தும் குரல்கள்... இருட்டு பூச்சிகள் போல தட்டளிகிறார்கள்.

நபர் 2 : கவிழ்ந்து விழுந்து கொள்ளுங்கள்.

(எல்லோரும் கவிழ்ந்து கொள்கிறார்கள்... சற்று நேரத்தின்பின் இரண்டு பேர் எழுந்து,)

எவரையும் பார்க்க முடியவில்லை... கண்கள் பருத்துவிட்டன.

போய்விடவேண்டும் இதைவிட்டு! போய்விட வேண்டும்!

### காட்சி-2

உயர்ந்த நாற்காலி ஒன்று சிறுமேடையில் போடப்பட்டிருப்பது. அருகில் மூன்று நாற்காலிகள். எல்லா இடத்திலும் இருள் சூழப்பட்டிருப்பது. இருந்தும் வெளிச்சம் சிறு கற்றைகள் போல ஆங்காங்கே விழுவது. உயர்ந்த ஆசனத்தில் வந்து அமரும் வயதான நபர், வயதான நபரின் ஆடைகள் விநோதமாக இருப்பது. மற்றொரு நாற்காலியில் இருக்கும் நபர் நடுத்தர வயதுடையவர்.

வயதானவர் : வெளியே இன்னமும் அடிக்கிறதா வெயில்

சிம்மன் : இப்போதுதான் உச்சிக்கு சென்றதுபோல அடிக்கிறது சூரியன்.

வயதானவர் : என்ன செய்கிறார்கள் அந்த சாஸ்திரக்காரர்கள்.

சிம்மன் : ஏடுகளைப் புரட்டி தேடுகிறார்கள்.

வயதானவர் : எப்போது தெரியும் அவர்கள் முடிவு... எல்லாம் இறந்த பிறகா. (கோபமாக)

சிம்மன் : தெரியவில்லை.

வயதானவர் : எதில் போய் சிக்கிக்கொண்டது சூரியன்... எந்த அருவ வலையில் மாட்டிக்கொண்டது.

சிம்மன் : மேகங்கள் கலைந்து போய்விட்டன. சாம்பல் தூசிகள்போல எங்கும் சிதறியது மேகங்கள்.

வயதானவர் : அந்த குருட்டு கிழவன் என்ன சொல்கிறான்.

சிம்மன் : அவன் எதையும் சொல்ல மறுக்கிறான்...மக்களை மட்டும் கருப்புபட்டைகள் கட்டிக்கொள்ள சொல்கிறான்.

வயதானர் : அவனைப்போலவா (கோபமாக) அவனை உயிரோடு கொல்ல வேண்டும்...ஏன் இப்படி நிற்கிறதாம் சூரியன்...அவனுக்கு தெரியும் தானே...அவனால் அந்த சூரியனை விழச் செய்ய முடியுமா...?

சிம்மன் : சிரிக்கிறான்...அவனுக்கு சூரியனே தெரியாது என்கிறான்.

வயதானவர் : குருட்டுமுண்டம்... எல்லாமும் தெரியும் அவனுக்கு...அவன் கண்களிடமிருந்து எதுவும் தப்ப முடியாது...எல்லா இரவுகளையும் அவன் கண்களின் மூலம் உறிஞ்சியிருக்கக்கூடும்.

சிம்மன் : கடல் கொந்தளிக்க தொடங்கிவிட்டதாம்...கடலின் நிறமோ கருநீலத்திலிருந்து மாறிவிட்டதாம்...எல்லா பக்கங்களிலும் மக்கள் புறப்பட்டு போகிறார்கள்.

வயதானவர் : எங்கே...எங்கே போகிறார்கள்.

சிம்மன் : ஏதாவது ஒரு சிறு இருளை நோக்கி...கண்களை மட்டுமாவது புதைத்துக் கொள்ளக்கூடிய இருள் நோக்கி...

வயதானவர் : என்ன பேசிக் கொள்கிறார்கள் அவர்கள்.

சிம்மன்: எப்போதோ ஒரு பெண் சூரியனை உதிக்கவிடாமல் தடுத்தது போலத் தான் இதுவுமென்று...

வயதானவர் : எந்த பெண்...சாபம் என்றா...

சிம்மன் : ரகசியமான குரலில் எவரையோ சொல்கிறார்கள்.

வயதானவர் : எவரால் நிறுத்த இயலும் சூரியனை.

(இரண்டுபேர் வருவது. வந்தவர்கள் வணங்கி நிற்பது)

வயதானவர் : என்ன சொல்கிறது உங்கள் சாஸ்திரங்கள்.

சாஸ்திரக்காரன் 1 : திட்டமாக எதையும் சொல்லவில்லை.

வயதானவர் : எதைத்தான் திட்டமாக சொல்லியிருக்கிறாய்...குறிகளும் படங்களுமான உன் குறிப்புகளில் எதைதான் குறித்து வைத்தார்கள்.

சாஸ். 2 : ஆறாயிரம் வருஷத்தின் முந்தி நடந்ததாக சாஸ்திரத்தில் குறிப்பு உள்ளது.

வயதானவர் : என்ன சொல்கிறது...சூரியனை மறைய செய்ய முடியுமா...

சாஸ். 2 : சூரியன் மறையாத நாள் பற்றி...

வயதானவர் : என்னவென்று

சாஸ். 2 : முப்பத்தியாறு நாட்கள் மறையாது எரிந்தது சூரியன்.

வயதானவர் : எத்தனை...முப்பத்தியாறு நாட்களா...

சாஸ். 1 : அதில் இறந்து, பைத்தியமாகிப் போனவர்கள் ஏராளம். பூமியே தீப்பற்றிக் கொண்டது போல் ஆனது.

வயதானவர் : முட்டாளே... ஆளை பயமுறுத்துகிறாயா... ஏன் அப்படியானது என்று மட்டும் சொல்...

சாஸ். 1 : 'பிரளயத்தின்' அறிகுறி என்று

வயதானவர் : பிரளயமா...என்ன உளறுகிறாய்...சரியாக சொல்...

சாஸ். 2 : அப்படியேதான் சொல்கின்றன சாஸ்திரங்கள்... காற்று ஒடுங்கிவிடும்... சூரியன் நின்றுவிடும்...இரவு வீழாது...கடல் வெறித்து சீறும்...என

வயதானவர் : இவை அறிகுறியா அல்லது பிரளயம்தானா...

சாஸ். 1 : இவைபற்றியெல்லாம் அதிக குறிப்புகள் இல்லை.

சாஸ். 2 : பிரளயம் எனக் கொண்டால்...

வயதானவர் : உன் தலை போய்விடும். (கோபமாக)

சாஸ். 1 : (மௌனமாக இருப்பது)

வயதானவர் : எப்படியாவது இருளை உண்டாக்க வேண்டும்.

சிம்மன் : மக்கள் எல்லாம் ஒடுங்கிப் போய்விட்டார்கள்...தெரு வெறிச்சோடி விட்டது.

வயதானவர் : எங்கே போய் தொலைந்தார்கள் ?

சிம்மன் : வீடுகளின் உள்ளே அடைந்துகொண்டார்கள்...எல்லோருடைய கண்களும் கருப்பு பட்டைகளால் கட்டப்பட்டன. இருந்தும் அவர்களால் சாப்பிட முடியவில்லை. எதை எப்போது சாப்பிடுவது, தயாரிப்பது என தெரிய வில்லை...அவர்களால் உறங்கவும் முடியவில்லை...எல்லோருக்குள்ளும் சூரியன் பதிந்து போய்விட்டது.

சாஸ். 1 : இருள் தானாகத்தான் கவிழவேண்டும்.

சிம்மன் : நின்ற இடங்களில் கண்கள் சொருகிக் கொள்ள நிலையற்று வீழ்கிறார்கள்.

வயதானவர் : இங்கும் அப்படியே ஆனது...புலம்பும் குரல்கள்...எல்லோரையும் விரட்டிவிட்டேன்...பெண்கள் குழந்தைகளை என்ன செய்வது.

சிம்மன் : பாதாள அறைகளில் தங்க வைக்கலாம்.

வயதானவர் : கைதிகளோட...

சிம்மன் : கைதிகளை விடுவித்துவிடலாம்...அவர்கள் கண்கள் இந்த வெயிலில் அற்று போய்விடும்...அத்தோடு பாதாள அறைகள்தான் சூரியன் அறியாதது.

வயதானவர் : எல்லோரையும் உள்ளே அனுப்பிவிடு. இருட்டில் பெயர் தெரியாத பூச்சிகள் போல ஜீவிக்கட்டும்...என்ன செய்யப் போகிறீர்கள் சாஸ்திரக்காரர்களே.

சாஸ். 1 : கரும்புகை உண்டாக்கி சூரியனை சுற்றி கருமை படரச்செய்யலாம்.

சாஸ். 2 : கரும்புகை சூரியனை மறைக்கக்கூடும்.

வயதானவர்: எதையாவது செய்து இரவை உண்டாக்குங்கள்.

சிம்மன் : நீங்களும் கண்களை கருப்பு துணியால் கட்டிக்கொள்வது நல்லது.

வயதானவர்: (திரைகளை விலக்கி வெளியே பார்ப்பது. பின் அமைதியாவது.)

## காட்சி-3

எல்லா பக்கமும் இருள் சூழ்ந்த அறை. அறைமேல் உள்ள துவாரங்களின் மூலமாக வரும் வெளிச்சம். கண்களைக் கட்டியபடி உட்கார்ந்திருக்கும் பெண். அருகில் நடுத்தர வயது ஆண்.

பெண் : கண்களை கட்டிக்கொண்ட போதும் எதுவும் மறையவில்லை.

ஆண் : ஏன் நாளெல்லாம் புலம்பிக் கொண்டிருக்கிறாய்.

பெண் : இரவு எவ்வளவு அமைதியாக இருக்கும். நீலத்தில் எரியும் சுடர்களோடான இரவு.

ஆண் : உனக்கு அது இன்னமும் ஞாபகத்திலிருக்கிறதா?

பெண் : நிச்சயமாக. இரவு தன் பிசுபிசுப்போடு படர்ந்த தெருக்கள்...அகல் விளக்குகள்...நிழல்களாய் அலையும் மனிதர்கள்.

ஆண் : எவ்வளவோ யோசித்தும் என்னால் ஒரு இரவை ஞாபகப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

பெண் : ஞாபகமிருக்கக்கூடும்...ஒரு இரவில்தான் நாம் சந்தித்துக் கொண்டோம்... நான் பிரசவித்த நாளின் இரவில் ஒரு சுடர் எனை பார்த்தபடியேயிருந்தது...ஆனால் அந்த குழந்தை.

ஆண் : ஏன்...குழம்பிப் போகிறாய்.

பெண் : ஒருவர் நிழலை ஒருவர் மிதிக்க ஓடிய பிராயத்து இரவுகூட அப்படியே இருக்கிறது. கண்ணாடியின் உள்ளே பதிந்துபோன முகங்கள் போல இரவுகள்.

ஆண் : எதுவும் புரியவில்லை எனக்கு.

பெண் : த்ரேஸாவின் குழந்தைகள் மிரண்டு போயிருக்கிறார்கள்...அருவெறுப்பான ஒரு பூச்சியைப் போல பார்க்கிறார்கள் சூரியனை.

ஆண் : அவள் வந்திருந்தாளா...

பெண் : பார்த்தேன் அவர்களை...அவள் நடுத்தெருவில் அழுதாள். நாட்களை கணக்கிட முடியவில்லை என்ற துக்கம்...

ஆண் : நிஜமாகவா...அழுதாளா...ஏன் நாட்களை தேடுகிறாள்...

பெண் : மரித்த நபரின் நினைவிற்காக...

ஆண் : எப்படி தெரியும் என்ன நாள் என்று. எல்லாமும் பகல். முடிவற்ற பகலின் ஊடே நாம்...

பெண் : எவ்வளவு முயன்றும் முடியவில்லை. விரல் இடுக்குகளில் ஒழுகும் தண்ணீர் போல கசிகிறது காலம்.

ஆண் : இன்று எத்தனையாவது நாள்.

பெண் : பல வருடங்கள் ஆனது போல தெரிகிறது.

ஆண் : அல்லது ஒரு நாள்தான் நீண்டுகொண்டே போகிறது.

பெண் : இவ்வளவு நீண்ட ஒருநாள் இருக்க முடியுமா என்ன?

ஆண் : குழம்புகிறது...வெளியே அரவமற்று விட்டதா...

பெண் : எவருமில்லை தெருவில்.

ஆண் : எல்லாம் மரித்துப் போய்விட்டார்களா...

பெண் : இல்லை...நத்தைகளைப்போல அவரவர் கூடுகளுக்குள்ளே.

ஆண் : சூரியன் அசையவேயில்லை.

பெண் : குழந்தைகளின் கண்கள் வீங்கிப் போய்விட்டன.

ஆண் : ம்.

பெண் : கனவின் சுனை அடைபட்டுப் போய்விட்டது. சிதறிய கண்ணாடி துண்டுகளைப் போல கனவு கூறுகளாகிப் போனது.

(கதவு தட்டப்படும் சப்தம்)

ஆண் : யார்.

(மீண்டும் தட்டப்படும் சப்தம்)

பெண் : யார்.

(குரல்) ''நான்தான்...''

உள்ளே வரும் நபர்: நீங்களும் கண்களை கட்டிக் கொண்டாகிவிட்டதா...

ஆண் : எங்கிருந்து வருகிறாய், தத்தா.

தத்தன்: கருப்பு சதுக்கத்திலிருந்து.

பெண் : அவர் வழி ஏதேனும் சொல்கிறாரா.

தத்தன்: சிரிக்கிறார்...குருடர்களுக்கு இல்லை சூரியன் என்கிறார்...நிஜம்தான்... அவர் கருப்புப் பட்டைகளை அவிழ்த்ததேயில்லையே.

ஆண் : என்ன நடக்கிறது வெளியே...

தத்தன்: எப்போதாவது சிலர் வெளியே வந்து சூரியன் தத்தளிக்கிறதா எ பார்த்துப் போகிறார்கள்.

பெண் : நகர்கிறதா சூரியன்.

தத்தன்: கரும்புகை போடுகிறார்கள் சூரியனை மறைக்க.

ஆண் : நிஜமாகவா...சூரியன் போய்விடுமா...

தத்தன்: போகலாம் ஆனால் மக்கள் இருப்பிடம் விட்டுப் போக தொடங்கி விட்டார்கள்.

ஆண் : எங்கே.

தத்தன் : காடுகளை நோக்கி...மேகத்தின் நிழல் அற்ற நகரம் நீங்கி புதர்களின் அடியில் பதுங்கிய இருள்தேடி...வனங்களை நோக்கி போகிறார்கள்.

பெண் : குகைகளுக்குத்தானா...

தத்தன் : குகை (யோசித்து) இருக்கலாம்...பழைய இருப்பிடம்தானே.

பெண் : நிச்சயமாக குகைகளுக்கேவா...

தத்தன் : தெரியவில்லை...வனங்களை நோக்கி போகிறார்கள்.

பெண் : எல்லாவற்றோடுமா...

தத்தன் : எதுவுமற்று.

பெண் : குகைகளில் காட்டுமிருகங்கள் இருக்கக்கூடும்...

தத்தன் : எல்லாமும் திரும்பவும் காட்டைநோக்கி...நகர்கின்றன ஆனால் சற்று நேரம் முன்பு பெரும் பரபரப்பு நேர்ந்தது.

ஆண் : என்னவாவது...எவரும் அடித்துக் கொண்டார்களா...

தத்தன் : இரவு விழும் தெரு பற்றிய சித்திரத்தை எவரோவரைந்து போயிருக்கிறார்கள்.

பெண் : சித்திரமா...பார்த்தாயா அதை.

தத்தன் : கருப்பு பின்னணியில் வானம்...கருப்பில்லை...கருநீலம்...நட்சத்திரங்கள் தெருக்களின் நிழல்... நீண்ட நீண்ட முகங்கள்....

பெண் : கனவுகளைப் போலவா.

தத்தன் : அப்படித்தான்.

பெண் : யாருடைய சித்திரம்.

தத்தன் : தெரியவில்லை...நகரில் விநோதமான குரல்கள் கேட்க தொடங்கி விட்டன...பல இடங்களில் வெடித்து எழுகிறது அழுகை.

பெண் : கேட்டிருக்கிறேன்.

தத்தன் : நேற்றுகூட பயணத்தில் ஒரு பெண்...வானத்தை நோக்கி கைகளை உயர்த்தி...

பெண் : வேண்டாம்...எனக்குத் தெரியும்.

தத்தன் : எப்படி...

பெண் : நான் அப்போது வெளியே வந்திருந்தேன்.

தத்தன் : பார்த்தாய்தானே.

பெண் : பார்த்தேன்...மனித ஆகிருதிகளைவிட பருத்த நிழல்கள். எல்லாவற்றின் ஊடேயும் பகல்.

ஆண் : பெண்கள் திடீரென எதற்கோ போய்வருகிறார்கள். என்ன நடக்கிறது வெளியே...

பெண் : பிரார்த்தனை.

ஆண் : எதற்காக

பெண் : சொல்லமுடியாது...ரகசியங்கள் நிறைந்தது.

ஆண் : தெரியும்...பெண்களால் இரவுகள் இன்றி இருக்க முடியாது.

பெண் : எதையாவது உளற வேண்டியதில்லை.

ஆண் ; பின் எதற்கு.

பெண் : ஒவ்வொருவருக்கும் இரவு வேண்டியிருக்கிறது எதன் பொருட்டாவது. இரவுதான் எவ்வளவு ஆழமானது...விசும்பும் எந்த குரலையும், எந்த முகத்தையும் இரவு காட்டி தந்ததில்லையே எவரிடமும். இரவுகள்...ம்... இரவுகள்.

(குரல் மங்கி எல்லோரும் பேசா நிலைக்கு திரும்புவது)

### காட்சி—4

சிறிய சதுரமான மேடை. இருபுறமும் கொஞ்சம் வெளி. குறைந்த வெளிச்சம்.

சாஸ்திரகாரன் 1 : கரும்புகை சூழ்ந்துபோனது எங்கும்...மேகங்களை போல திட்டு திட்டாக படர்கிறது பார்.

சாஸ். 2 : தெருக்களில், உயர்ந்த கட்டிடங்களின் மேல் எங்கும் கரும்புகை கப்பிக்கொண்டு...மனித நிழல்கள் போல தெரிகிறது.

மூன்றாம் நபர்: சூரியன் நகரக் காணோம்.

சாஸ். 1 : பேரழிவின் விளிம்பில் நிற்கிறது சூரியன்.

மூன்றாம் நபர்: என்னவாகும் அப்படியானால்.

சாஸ். 1 : உடைந்து சிதறக்கூடும்...பழுத்த வெடிகனியைப் போல வானம் கிழிபட நழுவி விழக்கூடும்.

மூன்றாம் நபர்: கிழட்டு சூரியன்தானோ...

சாஸ். 2 : உலகத்திற்கே மூப்பேறிவிட்டது. கரிந்த தோட்டம் போலானது உலகம்.

மூன்றாம் நபர்: என்ன பேசுகிறீர்கள்.

சாஸ். 2 : ஆதியில் எங்கும் இருள் மட்டுமே படர்ந்திருந்தது.வார்த்தைகளால் உருவானது வெளிச்சம், என்கிறது என சாஸ்திரம்.

சாஸ். 1 : இல்லை...ஆதியில் பெரும் ஒளி ஒன்றேயி ருந்தது. தன் சிதறலில் தான் அது எங்கும் வியாபித்தது ஒளியின் கொம்புகள் தீண்டியே எங்கும் உயிர் வந்தன.

மூன்றாம் நபர்: சுற்றிக் கொண்டது கரும்புகை சூரியனை.

சாஸ். 1 : நகர்கிறதா.

சாஸ். 2 : எதுவும் புலப்படவில்லை.

மூன்றாம் நபர்: கரும்புகைகள் விலகுகின்றன...போய்விட்டன சூரியன்...அப்படியே நிற்கிறது.

சாஸ். 2 : ஒருவேளை மஹாசாஸ்திரத்தின்படி அந்த நபர் வரும் வேளையின் அறிகுறியாக இது இருந்தால்.

சாஸ் 1 : மஹாவழிகாட்டியா.

சாஸ். 2 : நிச்சயமாக...எல்லோரும் எதிர்பார்க்கும் அந்த நபர். நிச்சயம் அந்த நபர் வருகைக்காகத்தானோ.

மூன்றாம் நபர்: கரும்புகைகள் சுழல்கின்றன. சூடிகார கிழவனைப்போல்...ஜனித்த குழந்தைகள் இதுவரை இரவை சந்திக்கவேயில்லை.

சாஸ். 1 : அப்படியேதான் இருக்கும்...அந்த நபரின் வருகைக்கான அடையாளம்தான் இது.

மூன்றாம் நபர் : யார்...யார் அந்த நபர்...

(வயதானவர் மீண்டும் வருகை)

அவர்கள் குறிப்புகளில் ஆழ்ந்து போயிருப்பது.

வயதானவர் : (கோபமாக) ஏன் கரும்புகை கலைந்து போனது...என்ன செய்கிறீர்கள் முட்டாள்களே. கண்கள் பழுத்துப் போய் உதிர்ந்துவரும் போல இருக்கிறது பாருங்கள்.

சாஸ். 2 : இனி எதிலும் சூரியனை நகர்த்த இயலாது.

சாஸ். 1 : மஹாசாஸ்திரம் ஒரு உண்மையை சொல்கிறது.

சாஸ். 2 : என்னவென்று நீங்கள் அறிந்ததுதான்.

வயதானவர் : ஏன் புதிர்போல பேசுகிறீர்கள்...என்ன சொல்ல சுற்றுகிறீர்கள்.

மூன்றாம் நபர் : யாரோ வரக்கூடுமாம்.

வயதானவர் : யார்...யார் அந்த நபர்.

சாஸ். 1 : எல்லோரும் எதிர்பார்க்கும் அந்த நபர் வரும் நாள் நெருங்கி விட்டது.

சாஸ். 2 : அதன் அறிகுறிதான் இது.

வயதானவர் : பிரளயம்...கரும்புகை...நபர்...ஏன் குழப்புகிறீர்கள். யார் வரப் போகும் நபர்.

சாஸ். 2 : அது தெரியாதது.

சாஸ். 1 : எல்லோரும் அவரை ஏற்றுக் கொள்வார்கள்.

வயதானவர் : வரப்போகிறவர்...இதை நகர்த்தி விடுவாரா...

சாஸ். 1 : அவர் வழிகாட்ட வருபவர்... அவரின் வருகைதான் இது.

வயதானவர் : நீங்கள் என்னை குழப்புகிறீர்கள்...உங்களுக்கு நிச்சயம்மூளை குழம் பித்தான் போய்விட்டது.

சாஸ். 1 : அவர் வருகைக்காக, மீன்களைப் போல விழித்துக் கொண்டிருக்க வேண்டும் நாம்...

சாஸ். 2 : இதை அறிவிக்க வேண்டியதுதான்.

வயதானவர் : யாரிடம் சொல்ல போகிறீர்கள்.

சாஸ் : எல்லோரிடமும்

வயதானவர் : அந்த நபர் எதற்கு...எங்கே போகிறீர்கள். முட்டாள்களே அவரை எப்படி தெரிந்து கொள்வீர்கள்...எல்லாமும் அந்த குருட்டுக் கிழவனின் திட்டமாக இருக்கும்...இத்தோடு எனை ஒழித்துவிட திட்டம் போட்டிருக்கிறான். அந்த கருப்பு சதுக்கத்தோடு அவனை நசுக்க வேண்டும்...நபராம் வருகையாம்.

(அதே வீடு. பெண், ஆண், தத்தன்)

தத்தன் : வெளியே அவர்கள் பேசும் சப்தம் கேட்கவில்லையா.

பெண் : யாருடன் பேசுகிறார்கள், யார் இருக்கிறார்கள் கேட்க.

ஆண் : எல்லோருடைய கண்களும் புதைந்துவிட்டன.எப்படியிருக்கிறது சூரியன்

தத்தன் : பழுத்துபோய்...அவர்கள் கூடி பேசுகிறார்கள்.

பெண் : எதைபற்றி...சூர்யனைப் பற்றியா?

தத்தன் : இல்லை. மஹாஉண்மை என்று வரப் போகும் நபரைப்பற்றி.

பெண் : யார் (ஆவலாக) நபரா...

தத்தன் : எல்லோரும் எதிர்பார்த்த அந்த நபர் வரப்போகிறாராம்.

பெண் : நிச்சயமாகவா. வரப்போகிறாரா?

ஆண் : யார் அது. உனக்கெப்படி தெரியும்.

பெண் : தெரியும். நாங்கள் பிரார்த்திக்கும் போதுகூட அதையே வேண்டினோம்.

ஆண் : யார்...யார் அது...

தத்தன் : அந்த நபர் வரப்போகிறார்...அவராலே இதுவெல்லாம் ஆகக்கூடும் என்கிறார்கள்.

பெண் : வேறு எல்லோரையும் இழந்தாகிவிட்டோம். பரிவான நபர் எவரு மில்லை. மனதின் எல்லா ரகசிய அறைகளுக்குள்ளும் அழைத்துப் போகக் கூடிய நபர்கள் எவரும் இல்லை.

ஆண் : நானும் கூடவா.

பெண் : நான் அதைப்பற்றி பேசவேயில்லை.

தத்தன் : அந்த நபர் குறித்து பல சண்டைகள் தொடங்கிவிட்டன. அவர் எப்படி யிருப்பார்...யாரைப் பார்க்க வருவார் என.

பெண் : யாரை...என்ன கேள்வி இது...நமக்காக வருவார்.

ஆண் : உனக்கு முன்பே தெரிந்தவரா...யார் அந்த நபர்.

பெண் : எல்லோரின் தீர்ப்புகளின் ஓலை சுருள்களோடு வருவார்.

ஆண் : பயமுறுத்துகிறாயா...

பெண் : அவரின் ஆடையின் ஒவ்வொரு நூலுக்கும் ஒரு சுகந்தம் உண்டு.

ஆண் : எல்லாம் உளறல்...சுண்டெலிகள் வரப்போவது பெரிய சுண்டெலியாக இருக்கும் என்றுதான் நினைக்கும்.

தத்தன் : எல்லோரும் குழம்பிப் போயிருக்கிறார்கள். வரும் வழியில் கைதிகளில் ஒருவனைப் பார்த்தேன். வெளுத்த அந்த முகம்...உதடுகள், வெறிப்பு, அவனுக்கு பிரகாசமே கொடூரமாக இருக்கிறதாம்...உளறுகிறான். தன்னை ஒரு சிலந்தியாகவே அவன் நினைக்க தொடங்கிவிட்டான்.

பெண் : சிலந்தியாகவா...ஏன்...

தத்தன் : அவன் அரசியல் கைதியாக இருக்கக்கூடும்...அவனைப் போல பலரும்...

பெண் : அவர்கள் என்ன சொல்கிறார்கள் வரப்போகும் நபரைப் பற்றி...

தத்தன் : வரப்போகும் நபர் தலையில் மூத்திரம் பெய்ய வேண்டும் என...

பெண் : சகிக்கவில்லை.

ஆண் : இன்று எத்தனாவது நாள்.

பெண் : எதற்கு.

ஆண் : நாட்கள் அன்றி இருக்க முடியாது என்னால்.

பெண் : உனக்கு நம்பிக்கையில்லையோ...

ஆண் : எதற்கு நம்பவேண்டும்... எதற்கு...

பெண் : அந்த நபர்

ஆண் : பேசாதே...தவளைகள் உளறிக் கொண்டுதான் இருக்கும்... அவற்றால் கடலைக் கடக்கமுடியாது.

தத்தன் : வெளியே ஏதோ சப்தம் கேட்கிறது. போக வேண்டும்.

காட்சி-5

எல்லோருடைய கண்களும் கட்டப்பட்ட நிலையில் பல்வேறு பக்கங்களிலும் நிற்பது

சாஸ் 1 : (உரத்த குரலில்) சரியான நேரத்தில் வரக்கூடும் அவர் வருகை.

சாஸ் 2 : ஓர் இரவைப் போல கவிழும் நம் முன் அமைதியாக.

நபர் 1 : இந்தக் குரல் யாருடையது...என்ன பேசுகிறார்கள்.

நபர் 2 : எந்த நபர்...வயோதிகனா...வயசாளியா.

நபர் 3 : உடம்பு மோசமாகிவிட்டது. என்னால் அவர் வரும்வரை இருக்க இயலாது.

நபர் 4 : வரப்போகும் நபர் பெண்ணாக இருந்துவிட்டால்...

நபர் 5 : பெண்ணாகவா...நிச்சயமாக இருக்கமுடியாது.

சாஸ் 1 : என்ன புதிதாக உளறுகிறீர்கள்...ஒரு பெண்ணா...எப்படி?

நபர் 4 : இல்லை. ஒரு பெண் வந்துவிட்டால்...

சாஸ் II : உன் உளறல்களை நிறுத்து.

நபர் 4 : இதுவரை வந்தவர்களாக நம்பப்பட்டவர்கள் எல்லாம் ஆண்கள்... இப்போதும் ஆணாகத்தானா...

சாஸ் I : இதற்கெல்லாமும் தீர்ப்பு வழங்கக்கூடும்.

நபர் 4 : தீர்ப்பின் சுருள் விரியும் முன்பு இது பாழ்நிலமாகிவிடும்.

சாஸ் I : நீ முதல்கல்லை எறிய புறப்பட்டவன்.

சாஸ் 2 : மங்குகிறது பார் சூரியன்...அவரின் ஸ்பரிச நுனியில் நிற்கிறது சூரியன்.

நபர் 4 : எவர் என கண்டுகொள்ள முடியாமலே போய்விட்டால்...நிச்சயம் இந்த சூரியனோடு நாம்...நினைக்கவே முடியவில்லை.

நபர் 1 : (பயந்த தொனியில்) நீ நினைத்ததுபோல இருக்காது.

நபர் 2 : தன் வஸ்திரங்களால் அவர் இரவை உண்டாக்குவார்.

நபர் 3 : தன் கண்களின்மூலம் நட்சத்திரங்களை.

நபர் 5 : ஆகாசத்தை.

நபர் 4 : என்ன முயன்றும் அந்த சூரியனை மறக்க...

சாஸ் 1 : கேளுங்கள்...நீங்கள் கேட்டிராத குரலை.

(புதிய குரல் கேட்பது)

வயதானவர் இப்போது புதிய அங்கியோடு வருவது. அவர் குரலும் மாறியிருப்பது.

வயதானவர் : (தானாக) எல்லோரும் குழம்பி விட்டார்கள் அந்த நபர்...அந்த நபர் என புலம்புகிறார்கள்...அந்த நபரின் குரலைக் கேட்க கூடி விட்டார்கள்....அந்த நபராக நான் மட்டும் இருந்தால்...ம்...

'நான்தான் அந்த நபர்'

(குரலை உயர்த்தி)

உங்களுக்காகவே வந்திருக்கிறேன். என் கழியின் நுனி உங்கள் கரங்களின் முன் உள்ளது. என் கழியை பற்றிக்கொள்பவர்கள் பார்ப்பார்கள் வீழும் சூரியனை...இரவை.

நபர் 1 : புதிய குரல்...எங்கோ கேட்டதுபோல.

நபர் 2 : பழைய குரல்தானா...

நபர் 4 : பழைய நபரின் குரல்...பலருக்கும் தண்டனையளித்த குரல்...அதிகாரமான குரல். இது புதிய நபரல்ல.

நபர் 5 : வேறு யார்...ஏன் குரல் இப்படியிருக்கிறது.

வயதானவர் : வீழும்பகல்...இரவு வரும்.

நபர் 4 : ஏற்கனவே நம்மோடிருந்த குரல்...நாம் பயந்த குரல்

நபர் 5 : ஏன் இத்தனை குரல்கள் கேட்கின்றன.

நபர் 3 : யார் வந்திருப்பது அந்த நபர்தானா...வேறா...யார்...

சாஸ் 1 : பூனைகள் அழுகுரலில் கத்துகின்றன.

சாஸ் 2 : மழையின் வாடை காற்றில்

நபர் 1,2,3: மழை வரப்போகிறதா...

வயதானவர் : மழை முடிந்ததும் எல்லாமும் வந்துவிடும். இரவு. விநோதம். தவளைகள் சப்தம்...இருள் பூச்சிகள்,

எல்லாமும்குழம்பிவிட்டது...(பலகுரல்கள்)

சாஸ் 1 : வீழ்கிறார்கள்.

வயதானவர் : வரும்... இரவுவரும். (சிரிப்பது)

பகலின் வலை அறுந்து விழும்... இனி அந்த நபராக நாமிருக்கலாம்.

(எல்லோரும் ஓய்ந்து வீழ்வது)

பழைய கால நடிகனைப்போல ஒருவன் தோன்றுவது. அவன் சிறு மூட்டையை சுமந்து வருவது. அவனிடம் விதவிதமான முகமூடிகள் தொங்கியபடியிருப்பது. அவன் பிரசங்கியைப் போல பேசுவது.

முன் இருந்தவைபற்றி ஞாபகங்களோடு இருப்பவர்களுக்கும் பூர்வகாலம் அறியாதவர்களுக்கும், இடைவிடாது இரவுகளில் நடித்து திரிந்த சுப்பையாதாஸின் குரல் இது...

சரிந்துபோன மேடைகளின்முன் இரவு நோக்கி வேஷமிட்ட பெண் பாத்திரங்கள் நிற்கிறார்கள். காற்று சுழன்று சுழன்று அடித்தும் சுற்றின இடத்துக்கேதான் திரும்பும். சமுத்திரங்கள் நதிகள் ஓடிவிழுந்தும் நிரபபாது.

காண்கிறதினால் கண் திருப்தியாகிறதில்லை. கேட்கிறதினால் செவி நிரப்பப்படுகிறதுமில்லை. முன் இருந்ததே இனி மேலும் இருக்கும்...

சூரியன் உதிக்கிறது. சூரியன் அஸ்தமிக்கிறது. தான் உதித்த இடத்திற்கே அது திருமபுகிறது. திரும்பாத காலங்கள் உண்டு. நான் திருமபவேயில்லை. எநத இடத்தில் இருந்து வந்தேனோ அங்கு சூரியனைப் போல நடுவானில் அகப்பட்டு போனேன்...

கோணலான வானத்தில் ஆட்டுக்குட்டியைபோல கொம்புகளால் முட்டிப் பார்க்கிறது சூரியன். ராஜா இல்லாதிருந்தும் பவுஞ்சு பவுஞ்சாய் புறப்படுகிற வெட்டு கிளிகளைப்போல ஆனார்கள் ஜனங்கள்.

சூரியனுக்குக் கீழே கண் இச்சிப்பது ஏராளம். கண்களை ஏமாற்றுவது எவரால் இயலும். எல்லாம் சூரியன் இருக்கும் பொருட்டே...கவிழ்ந்ததும் சூழும் இரவுதான் எத்தனை விநோதமானது.

நாடகத்தின் பின் வீடு திரும்பும் நடிகனைப் போல் அல்லவா இரவு வரும்.
இனிமேல் நாட்களில்லை பகல் மட்டுமே!
கடந்த காலம் இனி எவருக்கும் சாத்தியமில்லை.
பகலின் கூத்துகள் இனி ஆரம்பமாகும்.
விடி வெள்ளிக்கு எதிராக இனி நாடகங்கள் முடிவுறாது.
வெளியே வாருங்கள்...
பெரும் துயரமானதும், மறுக்க முடியாததுமான, நீங்கள் ஏற்கனவே அறிந்த உண்மையை திரும்ப சொல்கிறேன்.

உண்மையைச் சொல்கிறேன்.

''உலகம் உருண்டையானது'' ''உலகம் உருண்டையானது''

''தட்டையானதாக இல்லை...''

உலகம் ஆதியில் தட்டையாக இருந்திருக்க வேண்டும். தட்டையான உலகின் முடிவில் கடல் இருந்தது. நீந்தும் மீன்களின் நெற்றில் இருந்தது சூரியன்.

சூரியனை வெளியே கொண்டு வந்துவிட்டன மீன்கள்.

மாலையில் கொண்டு சென்றன.

அந்த மீன்கள் இப்போது இல்லை. தட்டையான உலகம் இரண்டு பக்கமும் முடிவோடிருந்தது.

உருண்டையான உலகம் சுழலும்.

விழித்திருப்பதும் உறங்குவதும்.ஒரே நேரத்தில் இரு பக்கம் நடக்கும்,

நிச்சயம் நீங்கள் வெளிவரவேண்டும்.

(தத்தன் வருவது)

தத்தன் : என்னவானது உனக்கு...உன் நாடகங்கள் என்னவாயின.

நடிகன் : உலகம் உருண்டையானது...ஆகாசமோ வடிவில்லாததாம்...

தத்தன் : என்ன சொல்கிறாய்...எதுவுமே புரியவில்லை எனக்கு.

நடிகன் : பார்த்துக் கொண்டேயிருப்பவனுக்கு பகல் நீண்டது.

எழுவார்கள் அவர்கள் இனிமேலும்...

அவர்களுக்காக வேண்டி கொண்டுவந்த முகமூடிகள்

அதுவரை தொங்கட்டும்.

(தத்தன் மெதுவாக வெளியேறுவது)

வருவார்கள். எவராவது சூரியனை அழைத்துப்போகும் மீன்களோடு.

முடிவற்ற கடலின் உள்ளே போய்விழும் எப்படியும் சூரியன்.

(முகமூடிகளை விட்டுவிட்டு அவனும் வெளியேறுகிறான்.)

வெறும் முகமூடிகள் — வெளிச்சம்.



*சென்ற இதழ் தொடர்ச்சி...*

## கழுகுகள்

**விஜய்தெண்டுல்கர்**

அப்பா: (தனக்குள்) சகாராம் வீட்டை விட்டுப் போய்ட்டான்...(ஆடியபடி உட்கார்கிறார். ரெகார்டு முடிகிறது. மானிக் கோப்பையை எடுத்து அதை நிரப்பிக்கொள்ள முனைகிறாள். உமாகாந்த் கோப்பையை எடுத்துக்கொண்டு ஸ்டூலில் உட்காருகிறான்.)

மானிக் : ரொம்ப ஜாலியா இருக்கு இல்லே ரம்யா? நான் காலையில வந்தப்ப மாடி ரூம்ல பார்த்தேன். நம்ம சித்தப்பா அங்கே இல்லை. திரும்பவும் பார்த்தேன், கவனமா. காணும் அவரை. அவரோட செருப்பு கூட இல்லை...தோட்டத்தில, மூலைமுடுக்கு எங்கேயும் சித்தப்பா இல்லை.

ரமாகாந்த் : நேத்து ராத்திரி எழவு நாம நாலு பேரும் குடிச்சோம். சித்தப்பா பேயாட்டம் ஊத்திக்கிட்டாரு. குடிச்சிட்டு கீழே விழுந்திட்டாரு. போதைன்னா செம போதை. இந்த தண்ணி வண்டியை கையையும் காலையும் பிடிச்சு மாடிக்கு தூக்கிட்டுப் போனோம். கொஞ்சநஞ்ச கனம்னா நெனக்கறே?

அப்பா : (ஆடியபடி) ''நிலா...ஓ... பிறைநிலா...ஓ...''

ரமாகாந்த் : அப்பா இன்னிக்கு. எழவு, சொர்க்கவாசி ஆயிட்டாரு...

உமாகாந்த் : பின்னே? சித்தப்பா நேத்து முழுக்க அப்பாவை பிச்சு பிடுங்கிட்டாரு...'என் பங்கைக் கொடு. என் பங்கை எடுத்து வை. கொறச்சல் அய்யாயிரமாவது கொடு.' (அப்பா மாதிரி) 'என்கிட்டே என்ன இருக்கு? என்கிட்டே ஏது பணம்?' (ரமாவைப் பார்த்துக கண்சிமிட்டி) நம்ம அப்பா.

'உன்னைத்தான் பிசினஸ்லே ந்து தொறத்திவிட்டுட்டேன். சட்டரீதியா உன்னைத் தூக்கி எறிஞ்சிட்டேன். நீ கேசில தோத்துப்போனா எனக்கு என்ன கவலை. ஒரு பைசாகூட கிடையாது. கூட்டிக் கொடுக்கற பயலே என் பணத்தைக் கேட்க வந்திட்டே என்கிட்டே எதுவுமில்லை!

ரமாகாந்த் :(அப்பாவை உணர்ச்சியற்று பார்த்தபடி)

'அப்பா, செல்ல அப்பா, பாவம் அப்பா, பாவம் திருட்டு அப்பா.

அப்பா : ''நிலா... ஓ... பிறைநிலா... ஓ'' (ஆடிக் கொண்டிருக்கிறார்)

ரமாகாந்த் : பிரிக்கமுடியாத அண்ணன் தம்பிங்க. ராமலட்சுமணன் மாதிரி. சித்தப்பாவும் அப்பாவும் ரெண்டுபேரும் மோசக்காரப் பயலுக.

(அப்பா மாதிரியே) ''எங்கே இருக்கு? பணம் எங்கே இருக்கு?'' எழவு வெடியக்காலை, இன்னிக்கு, ரைபிளை எடுத்துக்கிட்டு பறவைங்களை சுடவந்தேன். பொழுது வெடியற நேரம் போய் சித்தப்பாவை பார்த்திட்டு வரலாம்னு பார்த்தேன் நேத்து நைட் ஃபுல் போதையில இருந்தாரே! கதவு மூடியிருந்திச்சு. உள்ளே போனேன். சித்தப்பா முழிபிதுங்கிப் போய் மல்லாக்க விழுந்து கிடந்தாரு. நான் கத்தினேன் ''என்ன நடக்குது

இங்கே?'' ஆமாம், காதில விழுந் திருந்தா குதிச்செழுந்து உக்காந் திருப்பாரு ''என்ன சித்தப்பா, எழுந் திருக்கல்லியா''ன்னு கேட்டுக்கிட்டே நாமும் போயிருப்போம். அதனால அவரை உலுக்கினேன். சித்தப்பா எழுந்திருந்தாரு கண்ணை முழிச்சிப் பார்த்தாரு. பயங்கரமா ஊளையிட் டாரு. கடவுளுக்குத்தான் வெளிச்சம். ராத்திரி முழுக்க நம்ப அப்பா...எழவு... நம்ம செல்லம் மானிக் விடியற்காலை எழுந்திருக்கணும். அந்த ஹோண்டுர் பயகிட்டே போகணுமே. அதனால சித்தப்பா வாயை மூடினேன். இப்படி. அவ்வளவுதான் வாயை மூடினேன். அப்புறம் சொன்னேன்.

'செல்ல சித்தப்பா, ஒண்ணுமில்லாத துக்குப் போய் ஊளையிடாதீங்க.' இதுக்குப் போய், ரம்யா, அவர் படுக்கையிலிருந்து தாவி எழுந்தாரு, எழவு ரப்பர் பந்து மாதிரி கதவை நோக்கி ஒரு பாய்ச்சல். அப்புறம் சித்தப்பா கம்பி நீட்டிட்டாரு. எழவு தடுக்கலாம்'னு பார்த்தேன். பின்னால ஓடினேன், துப்பாக்கியோட. ஆனா சித்தப்பா, எழவு மான்மாதிரி துள்ளி ஓடிப் போயிட்டாரு. ஓடிப் போயிட் டாரு. சித்தப்பா போன இடம்? யாருக் குத் தெரியும்.

(மானிக் சிரித்தபடியே நிற்கிறாள்)

உமாகாந்த் : சித்தப்பா பெரிய மனு ஷன். சீயர்ஸ் டு ஃபாதர். அண்டு மதர் அப்ஃகோர்ஸ்.

ரமாகாந்த் : அப்ஃகோர்ஸ் அம்மாவும் வேணும்.

(இருவரும் குடிக்கின்றனர்)

ஹாப்பி பர்த்டே டு அங்க்கிள்!

உமாகாந்த் : ஹாப்பி பர்த்டே (குடி போதையில் சிரிக்கிறான்)

ரமாகாந்த் : தம்பி, சித்தப்பா இங்கிதம் தெரியாத எழவு காட்டான். போறப்ப ஒரு பைசாகூட சொல்லலே. எழவு மரியாதையே கிடையாது.

உமாகாந்த் : நீதான் ஓடவச்சிட்டியே ரம்யா?

ரமாகாந்த் : அப்படிலாம் இல்லே தம்பி. அஹிம்சைதான்என் கோட்பாடு. உன் சித்தப்பா உன் அப்பாவோட எழவு உடன்பிறப்பு. அவர் கிட்டதட்ட உங்கப்பா.

அப்பா : (அடியபடி) நிலா ... ஓ ... விழுந்தது. இப்ப இப்பத்தான் நாம கொஞ்சம் ஆடணும். சுனக் சுன் சுனி... சுனக் சுன் சுனி...

ரமாகாந்த் : அப்பா, அதெல்லாம் அரேன்ஜ் பண்ணியிருக்கலாம். அதுக் கெல்லாம் எழவு நேரமில்லை.

அப்பா : இங்கேதான் எல்லாம் ஆடி னாங்க. அந்த ஹீரா பண்டார்புர்க் கார். அந்த அழகி விதா சதார்கர்.. ஓ... என்னமா வெட்கப்பட்டா? ராத்திரி போனதே தெரியலை...இந்த இடத் தில்தான் மண்டிபோட்டு...இங்கேதான் ''ஓ நிலா... ஓ... பிறைநிலா''

மானிக் : (கொட்டாவி விட்டபடி) ரம்யா, உம்யா நீங்க எவ்வளவு நாழி இப்படி டயத்தை போக்கப்போறீங்க... நான் சொல்லிட்டேன்பா. எனக்குத் தூக்கம் வருது. என்னத்துக்காக வெயிட் பண்றீங்க? உம்யா... சட்டுப்புட்டுனு தீர்த்துடு.

(ஆடிக் கொண்டிருக்கும் தந்தையை சுட்டிக்காட்டுகிறாள்)

ரமாகாந்த் : (உமாகாந்திடம்) தம்பி... (உமாகாந்த் தோளை ஆட்டுகிறான்) (சுதாரித்துக் கொண்டு குரலை உயர்த்தி) போறும். இங்கே டான்ஸ் நடக்கப்போவுது ரம்யா ... நாட்டுப்புற நடனம்! ராத்திரி முழுக்க...சுனக் சுன் சுனி...

உமாகாந்த் : (ஸ்டூலிலிருந்து எழுந்திருந்து, குரலை உயர்த்தி) ரம்யா அதை நான் நடக்கவிடமாட்டேன்.

(மானிக் சென்று இரு கதவுகளையும் சாத்துகிறாள். டெலிபோன் ரிசீவரை எடுத்துக் கீழே வைக்கிறாள்)

ரமாகாந்த் : எழவு, என்னடா சொல்றே? அப்பாவோட வார்த்தை தான் நமக்கு எழவு வேதவாக்கு!

உமாகாந்த் : அப்பா, சித்தப்பாவோட வார்த்தை...இந்த வீட்லே எந்த கூத்தும் நடக்கப்படாது. நடக்கவிடவும் மாட்டேன்... நிச்சயம்.

ரமாகாந்த் : ஏன் இதுங்களை நடக்க விடமாட்டே? குடி...இன்னும் கொஞ்சம் குடி...அப்ப நீ இப்படிலாம் உளற மாட்டே...குடி...

உமாநாத் : (குடிப்பது போல் பாவனை செய்து) யாருடா உளர்றாங்க? நானா? இல்லாட்டி நீயா?

ரமாகாந்த் : இந்த மாதிரி கேள்வி கேட்கிறதே நீ உளர்றேன்கறதைக் காட்டிக் கொடுக்குது.

உமாகாந்த் : வாயை மூடு! ஒரு வார்த்தைகூட பேசக்கூடாது...நான் குடிச்சிருக்கேன் ரம்யா...

அப்பா : (குடித்த நிலையில் தான் உட்கார்ந்திருந்த ''நிலா...ஓ...பிறை நிலா'' இடத்தில்)

ராஜா...ஓ... நான் துருப்புச் சீட்டு... தொலைஞ்சேன் நான்.

ரமாகாந்த் : (கண்ணை மூடி) எழவு பன்னிடா நீ. எழவு அப்பாவோட ஆசைங்களுக்கு இடம் இல்லியா? தேவடியாப் பையா! மாணிக். இன்னொரு கிளாஸ். (கண்ணைச் சிமிட்டி) (மானிக் கிளாசை நிரப்புகிறாள். அதைக் கையில்எடுத்து) ஹா...நெஞ்சே படபடக்குதுடா ... எவண்டா அப்பாவோட ஆசைக்கு 'இல்லை போ'ன்னு பதில் சொல்றது?

(மானிக் கிளாசை நிரப்புகிறாள். பின் ஓப்பனரை எடுக்கிறாள்)

மானிக் : (கிளாசையும் பின் ஓப்பனரையும் பக்கத்து டேபிளில் அடுக்கியபடி) உம்யா, ரம்யா ரெண்டுபேரும் நிறுத்துங்க. சித்தப்பா போனதைக் கொண்டாட கூடியிருக்கோம். நீங்க ரெண்டு பேரும்...? அப்பா என்ன நெனச்சுப்பாரு?

உமாகாந்த் : மானிக், வாயை மூடிக்கிட்டிரு! இல்லாட்டா உன் குரல் வளையைக் கடிச்சுக் கொதறிடுவேன் நான் குடிச்சிருக்கேன்.

ரமாகாந்த் : எழவு குடிகாரா! பெரிய அலம்பல் பண்றியே!

மானிக் : (சுற்றும் முற்றும் பார்த்து) உம்யா. ரம்யா போதும் நிறுத்துங்க (ரமாகாந்தைப் பார்த்து சைகை செய்கிறாள்)

ரமாகாந்த் : (பக்கத்திலுள்ள அலமாரியைத் திறந்து காலி சோடாபாட்டிலை

எடுத்து கீழே அடித்து நொறுக்கிவிட்டு கத்துகிறான்) உம்யா... உம்யா... வாடா தில்இருந்தா, தீர்த்துடறேன் ஒன்னை... அப்பாவோட ஆசைக்கு எதிர்ப்பு தெரிவிக்கிற பன்னி!

உமாகாந்த் : (மேஜையில் கிடக்கும் பின் ஒப்பனரை எடுத்து) என்னைவிடு மானிக் என்னைவிடு (அவனைப் பிடித்துக் கொண்டிருப்பதுபோல் பாவனையில்) இந்தத் தேவடியாப் பயலை போட்டு புரட்டிட்டு வரேன்! கரப்பாம் பூச்சியை போட்டு நசுக்கறமாதிரி நசுக்கிட்டு வரேன்! விடு என்னை! விடு என்னை! இந்த கூட்டிக் கொடுக்கிற பயலை கொன்னுட்டு வரேன் விடு என்னை.

ரமாகாந்த் : பலே! நீ என்னைக் கொல்லப் போறியா? இவன் எழவு மண்டையை உடைச்சிடறேன் எழவு நாத்தம் பிடிச்ச தேவடியாப்பய! அவனை விடு மானிக்... அவனை விடு.

உமாகாந்த் : மானிக் என்னை விடு. (உமாகாந்த் அப்பா உட்கார்ந்திருக்கும் நாற்காலி நோக்கிப் போகிறான் நாற்காலியின் பின்னால் நிற்கும் உமாகாந்தைப் பிடிக்கிறான். இருவருக்குமிடையில் அப்பா மாட்டிக் கொள்கிறார் ரமாகாந்த் நாற்காலியைக் கவிழ்க்கிறான். ரமாகாந்த், உமாகாந்த் அப்பா மூவரும் தரையில் சாய்கிறார்கள். அப்பா காணாமல் போகிறார் சிறிது நேரம் கழித்து.

அப்பா : (எருதுபோல் மூச்சுவிட்டபடி) என்னை விட்டுடுங்க. என்னைக் காப்பாத்துங்க. காப்பாத்துங்க! சீக்கிரம் வாங்க! கொலை! என்னை இவங்க கொல்றாங்க! ஓடிடறேன்! அம்மா... ஆ...ஆ...

(ரமாகாந்த், உமாகாந்த் இருவரும் அப்பாவைதூக்கிவிடுகின்றனர்... அப்பாவின் தலையில் பலமான வெட்டு. குருதி வெள்ளமாகப் பாய்ந்து கொண்டிருக்கிறது. ஏகதேகத்திற்கு நடுங்கிக் கொண்டிருக்கிறார் அப்பா. மானிக் நாற்காலியை சரியாகப் போடுகிறாள். இருவரும் அப்பாவை கைத்தாங்கலாக பிடித்துக் கூட்டிச் செல்கின்றனர். அப்பாவை நாற்காலியில் உட்கார வைத்து)

ரமாகாந்த் : செல்ல அப்பா... கண்ணு அப்பா... பலமான காயம் பட்டுடுச்சா அப்பா...

உமாகாந்த் : Sorry-பா! இதபாரு... அவரை படுக்கவை.

ரமாகாந்த் : படுத்துக்குங்கப்பா (அப்பாவின் கழுத்தைப் பிடிக்கிறான்)

அப்பா : (கூசி ஒதுங்கிப் போய் எழுந்திருந்து சோபாவின் மீது நிற்கிறார்) வேணாம். வேணவே வேணாம்... பிசாசுங்களா! கூட்டிக் கொடுக்கிற ஜன்மங்களா! என்னைக் கொல்லப் போறீங்க! என்னை சாகடிக்கப் போறீங்க... கொலை... நான் சாகவிரும்பலே... நான் சாகமாட்டேன். நான் பேயா மாறுவேன், உங்க மார்மேல உக்காந்து ... கொலை ... போலீசைக் கூப்பிடறேன். போலீஸ் டெலிபோனை நோக்கி ஓடுகிறார் ரிசீவரை எடுக்கிறார்.

ரமாகாந்த் : (அருகே சென்று தாஜா செய்யும் பாணியில்) அப்பா... அப்பா... அமைதி! அப்பாவின் கையிலிருக்கும்

ரிசீவரை வாங்கி வைக்கிறான். அப்பா பின்னடைகிறார்.

உமாகாந்த் : அப்பா, அப்படிலாம் நாங்க ஒண்ணும் பண்ணலே (ரமாகாந்திடம்) நீ ஒரு தேவடியாப் பயடா! (அப்பா இன்னொரு முறை ரிசீவரை எடுக்க முயற்சிக்கிறார். மானிக் அதைக் கைப்பற்றுகிறாள்)

மானிக் : போறும்பா (சிறிது கோபத்துடன்) அப்பா, இதுக்கு போய் இந்த ஆர்ப்பாட்டம் பண்றீங்க! அப்பா, இது சின்னூண்டு காயம்.

அப்பா : நீயும் என்கிட்டேர்ந்து போயிடு பெண் பேயே! நீயும் இவங்க மாதிரிதான்! நீங்கசெஞ்சிருக்கீங்க சதி. நீங்க என்னைக் கொல்லப் போறீங்க! நீங்க என் உயிரை எடுக்கப் போறீங்க! என்னை சாவடிக்கப் போறீங்க! நான் வச்சுக்கிட்டிருக்கிற கொஞ்ச நஞ்ச பணத்தையும் கொள்ளையடிக்கப் போறீங்க! எனக்குத் தெரியும் (அப்பா அதிர்ச்சியில் அப்படியே அமைதியாகிறார். அவர்களும் அமைதியில் ஆழ்கிறார்கள்)

ரமாகாந்த் : (வேகமாக) என்ன பணம்பா அது?

உமாகாந்த் : எது? அந்த 'கொஞ்ச நஞ்ச' பணமா?

ரமாகாந்த் : பலே'ப்பா நீங்க பெரிய கில்லாடி பண்ணிப்பா! எனக்கு என்னவோ அப்படித்தாம்பா தோணுது?

ரமாகாந்த் : இவரு ரொம்ப கபடஸ்தர்! கிழத் தேவிடியாப் பையன். பெத்த பன்கிட்டியே சொத்தை மறச்சு வைக்கற ஆளு.

ரமாகாந்த் : சரி, அப்பா மறைச்சு வைப்பாரு! நீ எழவு என்ன பண்ணுவே? நீ என்ன செய்வே? நீ எழவு கஞ்சனாச்சே (உடைந்த சோடாப் பாட்டிலையும் பின் ஒப்பனரையும் எடுத்து பின் ஒப்பனரை உமாகாந்திடம் கொடுக்கிறான்.)

உமாகாந்த் : வாயை மூடறா. தேவடியாப் பையா! (பின் ஒப்பனரைக் காட்டுகிறான்)

ரமாகாந்த் : நாக்கை அடக்குடா! உம்யா. (அப்பாவை நடுவில் வைத்து பாசாங்கு சண்டையை ஆரம்பிக்கிறார்கள்.)

அப்பா : (அலறி) ... ஓ...நோ ... என்னைக் கொல்லாதீங்க. (அவர் முகத்திலும், உடலிலும் அளவற்ற பயம். நடுநடுங்கியபடி உட்காருகிறார்) என்னைக் கொல்லாதீங்க...கெஞ்சிக் கேட்டுக்கறேன். தயவு செஞ்சு என்னை...

ரமாகாந்த் : (உமாகாந்த்திடம்) ஒரு பக்கமா வாடா...(அப்பாவிடம்) 'சரி எவ்வளவு பணம்'பா இருக்கு? சொல்ல அப்பா!

உமாகாந்த் : (அப்பாவை நெருங்கி) அப்பா நாங்க கொள்ளையடிக்கப் போறது எந்த பணத்தைன்னு சொன்னீங்க?

ரமாகாந்த் : (அவனை நோக்கி இரைந்து) தள்ளுடா! இல்லாட்டி குறுக்கே வகிர்ந்துடுவேன்! (அப்பாவிடம்) என்கிட்டே சொல்லுப்பா (அப்பா கதவை நோக்கி ஓடுகிறார்)

மானிக் : (அப்பாவை வழிமறித்து, உமாகாந்த், ரமாகாந்த்தை நோக்கி)

நீங்க ரெண்டு பேரும் பேயன்க! (அப்பாவிடம்) அப்பா என்கிட்டே சொல்லுங்க நாங்க கொள்ளையடிக்கப் போறது எந்தப் பணத்தைன்னு சொன்னே?

அப்பா : (இன்னமும் நடுக்கம்குறைந்த பாடில்லை) பணம் ... பாங்க்கிலே இருக்கு...பாங்க்...

(கதவை நெருங்க முயற்சிக்கிறார்)

ரமாகாந்த் : (அவரைப் பிடித்து) எந்த பாங்க்? (அப்பாவுக்கு பதில் பேச விருப்பமில்லை. அவர் நடுங்கியபடி நிற்கிறார்) எந்த பாங்க்கிலேப்பா? சொல்லுங்க ... பேசுங்க ... இல்லாட்டி இந்த எழவு உம்யா ஒரு மண்ணும் இல்லாததுக்கு கொன்னுடுவான் உங்களை. திருட்டுத் தேவடியாப் பய! சொல்லுங்க! பணம் எந்த பாங்க்கில இருக்கு?

உமாகாந்த் : (உரத்த குரலில்) இப்ப சொல்லப் போறியா? இல்லாட்டி... கிழப்பன்னியே!

அப்பா : (அவசரமாக) பஞ்சாப்! பஞ்சாப் பேங்க்! என்னைக் கொன்னுடாதீங்க! கூட்டிக் கொடுக்கற பசங்களா.

உமாகாந்த் : (இரைந்து) யாருபேருல இருக்கு அக்கவுண்ட்?

ரமாகாந்த் : அக்கவுண்ட் யாரு பேரில இருக்கு? சீக்கிரம் சொல்லுங்க!

மானிக் : அப்பா மேலே போப்பா! சொல்லு! எல்லாத்தியும் சொல்லு,

அப்பா : உங்க எண்ணம் நிறைவேறாது! கூட்டிக் கொடுக்கற பசங்களா. உங்க எண்ணம் நிறைவேறாது (இன்னும் நடுங்கிக் கொண்டிருக்கிறார்) ''பித்தலே பிளம்பர்ஸ்''

ரமாகாந்த் 'பித்தலே பிளம்பர்ஸ்' (உமாகாந்த்திடம்) பழையஅக்கவுண்ட் மாதிரி இருக்கு! (அப்பாவிடம்) இது பழைய அக்கவுண்ட் இல்லேப்பா? ஓ... சித்தப்பாவை கழட்டி விட்ட அக்கவுண்ட் அப்ப, அவரும் சும்மா இங்கே வரலே!

அப்பா : அது பழசு...ஆனா என்னை கொன்னுடாதே!

மானிக் : அதுலே எவ்வளவு இருக்கு! பணம்? (ரமாகாந்த்திடம்) அதைக் கேளு.

அப்பா ; (சற்று முயற்சி செய்து) ஏழாயிரம்.

மானிக் : (நினைவற்று) நான் சொன்னேனில்லே?

அப்பா : பெண் பிசாசே! நீ ஒரு தேவடியாளாத்தான் சாவே.

ரமாகாந்த் : இதெல்லாம் சொல்லத் தேவையில்லை...மேல போங்க...இன்னும் ஏதாவது சொல்லுங்க? செக் புக் எங்கே இருக்கு?

அப்பா : தோ...அது என்கிட்டேதான் இருக்கு.

உமாகாந்த் : (யதேச்சையாக டின் ஒப்பனரைக் காட்டி) அப்பா, வேற எங்கெங்கே பணத்தை போட்டு வச்சிருக்கீங்க? பதறாம, உணர்ச்சி வசப் படாம சொல்லுங்க. (ரமா வருகிறாள். துளசி மாடத்தருகில் நிற்கிறாள்)

அப்பா : (கத்துகிறார்) பிசாசுங்களா! வேற எதுவும் இல்லேடா...வேற இல்லை...நெஜம்மா இதான் இருக்கு

தயவு செஞ்சு என்னைக் கொன்னுடா தீங்க...உங்க அப்பன்டா நான் கூட்டிக் கொடுக்கற பசங்களா! நான்.அப்பா.

ரமாகாந்த் : அப்பா! தன் குழந்தைக் கிட்ட பணத்தை மறைச்சு வைக்கிற அப்பா!

அப்பா : என்னைக் கொன்னுடாதீங்க? என்னை விட்டுடுங்க...மன்றாடிக் கேட் டுக்கறேன் ஒங்களை. என்னை விட்டு டுங்க.

ரமாகாந்த், உமாகாந்த், மானிக் மூவரும் ஒருவரை நோக்கி ஒருவர் சமிக்ஞை செய்கின்றனர்)

ரமாகாந்த் : அப்பா, பேசாம அந்த அக்கவுண்ட்டை என் பேருக்கு மாத்தி கொடுத்துடுங்க! அந்த ஏழாயிரம்.

அப்பா : முடியாது!

(எழுந்திருக்கிறார் அப்பா, ரமாகாந்த் சோபாமீது தாண்டிக் குதிக்கிறான். முன்னாலிருந்து ரமாகாந்தும் பின்னா லிருந்து உமாகாந்த்தும் அப்பாவைக் கைப்பற்றுகிறார்கள்)

இல்லேநான் கொடுத்திடறேன். கொடுத்திடறேன்.

மானிக் : ரெண்டு பேரும் அவரை விடுங்க!

(இருவரும் நகர்கிறார்கள். மானிக் தந்தையைக் கைத்தாங்கலாய் பிடித்து உட்கார உதவுகிறாள்)

உக்காருங்கப்பா! மனசை ஆத்திக் குங்க... அப்பா ஒரே ஒரு செக் எழு துங்க (பேனாவைக் கொண்டு வருகி றாள்)

(அப்பா தாங்க முடியாத இறுக்கத் திலும் மயக்கத்திலும் அலுப்பூட்டும் வகையில் கதற ஆரம்பிக்கிறார் செக் புத்தகத்தை எடுத்து எழுத ஆரம்பிக் கிறார்.)

உமாகாந்த் : (செக்கைப் பறித்து) எழவு இன்னும் ரத்தம் ஊத்திக்கிட்டே யிருக்கு.

ரமாகாந்த் : பொறுங்க! கொஞ்சம். டிங்க்சர் அயோடின் கொண்டு வரேன்

அப்பா : (இரைந்து) வேணும்! நீங்க என்னைக் கொல்லப் போறீங்க! (அவர் அழுகிறார்) மருமகப் பொண்ணே! எங்கே இருக்கே நீ? மருமகளே இவங்க என்னைக் கொன்னுக்கிட்டிருக்காங்க! என்னைக் கொன்னுக்கிட்டிருக்காங்க மருமகளே!

(ரமா தூரசிமாடத்தைவிட்டு பின் கத வருகில் வருகிறாள். அது தாழ்ப்பாள் போடப்பட்டுள்ளது. கதவைப் பார்த்து பொருமுகிறாள், அதன்மீது சாய்ந் தபடி)

மானிக் : (ரமாகாந்த், உமாந்த்திற்கு சமிக்ஞை செய்தபின்)

வெயிட், அப்பா, நான் அவளைக் கூட்டிக்கிட்டு வரேன்.

(அவள் டெலிபோனிடம் சென்று ரிசீ வரை சரியாக வைக்கிறாள். பிறகு சென்று கதவைத் திறக்கிறாள். வழி நடையில் ரமாவைப் பார்க்கிறாள். மானிக்கின் முகத்தில் வெறுப்பு ஆனால் இனிய குரலில்) இத பாருங்க! அப்பா கூப்பிடறாரு.

(ரமா ஓடிவருகிறாள். அவரைப் பார்த்து இடிந்து போய் நிற்கிறாள்) என்ன வாயைப் பொளந்துகிட்டு மண்ணு மாதிரி நிக்கறீங்க! குட்டி விபத்து! போங்க! உடனே டிங்க்சர் அயோடின்

கொஞ்சம் கொண்டுவாங்க. போங்க... போங்க.

(இப்படி இவை நடைபெறுகையில் அப்பா மற்ற கதவு வழியாக ஓடிப் போகிறார். ஒளி மங்குகிறது. (பின்னால்) வழிப்பாதையில் மட்டும் ஒளி. அந்த வழியில் அப்பா வேட்டித் தலைப்பை தூக்கியபடி பின்னால் திரும்பித்திரும்பி பார்த்தபடி ஓடுகிறார். கழுகுகளின்பேரிரைச்சல் பின்னணியில்) (இருள் பரவுகிறது)

காட்சி-6

ஒளி படர்கிறது. கார்ஷெட்டில் மட்டும் ஒளி.

ரஜனிநாத் : (சுருட்டி வைக்கப்பட்ட விரிப்பில் முழங்காலை சாய்த்துக் கொண்டு)
வணக்கத்துக்குரிய தந்தைக்கழுகு
வெற்று வட்டமாய்
வாழ்ந்து முடிந்த கதை இது.
ரமா காவியத்தின்
அவள் பட்ட அல்லல்களின்
ஒரு ஒரே ஒரு பகுதி இது
உள்ளத்திலேயே வயது முதிர்ந்த கழுகு
பிடிவாதம் நிறைந்த பிசாசு
ஆசை நிறைந்த கழுகு
அழிந்தது இறுதியில்,
ஆசை அசைபோடும் வயிற்றை
மறைத்து
மரப்பொந்திலிருந்து கிளம்பி
சிறகை அடித்துப் பறந்தது கடைசியில்
நம்பிக்கைத் தடங்களே இல்லாத
மண்ணில்
நடைப்பிணமாய்
பார்க்க சகிக்காத
பாகங்களுடன் வாழ்ந்தது.

அவர் போனபின் போனது கண்ணீர்.
வௌவாலின் சிறுநீர்போல் பூமியை
நனைக்கும் கண்ணீர்.
போனாலும் புலைநாற்றக் கண்ணீர்
இன்னும் நாறும்.
இருந்த இடம் கிளறும் வயிற்றை,
இன்னும்
'காற்றில் எங்கே?' எனச் சொல்ல
முடியாதபடி
இருக்கும் நாற்றம்
இங்கேயா...இல்லை அங்கேயா..
கழுகுகளின் கண்ணீர் வற்றுவதில்லை.
மனிதனின் கண்ணீர் வற்றிக்காயும்
காய்ந்த இடங்களில் சமிக்ஞையாய்
சுருக்கம்
இதோ இங்கேதான் தொங்கியது—
அப்பாவின்
வளைந்து பரந்து நீண்ட துவளும்
அங்கங்கள்
கிழக்கழுகின் மகனாய்ப் பிறந்தவன்
தடுத்தேனோ அதை
பதிலாக,
இன்னெரு உதைக்கு,
இன்னொரு துளி ரத்தத்திற்கு
பிரார்த்தனை செய்தேன்
இன்னும் ஆழமான காயம் என்று
நான் வேண்டினேன்,
'அழுகும் மூளையில்
கொஞ்சம் ஆழமாய்.'
அதனால் எரியும் பிரச்சனைகள்
அணையாதோ கொஞ்சம்?
குளிராதோ காற்றும்?
இருந்தது கழுகுகள் ஐந்து
நேற்று தந்தைக் கழுகின்
கதை முடிந்தது.
ரமா சோக காவியத்தின்
ஒரு பகுதி இது
(இருள் பரவுகிறது)

## அங்கம் இரண்டு

### காட்சி-1

ஒளி பரவுகிறது. பகல்நேரம், வரவேற்பு அறை. ரமாகாந்த், உமாகாந்த் மானிக்.

ரமாகாந்த் : எழவு ஒங்க எல்லாரையும் தீர்த்துடறேன். மானிக், உன் கார்டை எடுத்துக்க. உம்யா, உன் கார்டை எடுத்துக்க. இந்த தடவை ஜெயிப்பு எனக்குத்தான் (தன் கார்டுகளை எடுத்துக்கொண்டு, ஒரு கார்டைப் போடுகிறான்.) விளையாடு, ஒரு கார்டை எடு மானிக். உம்யா, இவ்வளவு அலம்பல் பண்றியே, எடேன் ஒரு கார்டை. இரு, ஒன்னைத் தீர்த்துடறேன். பணத்தை கக்க வைக்கிறேன்.

(உமாகாந்த் அமைதியாக ஒரு கார்டை எடுக்கிறான். ஒரு கார்டைப் போட்டு விட்டு மீதி கார்டுகளை மேஜைமீது பரப்புகிறான். ரம்பி விளையாட்டு. மானிக் விருட்டென்று கார்டுகளைப் போடுகிறாள். ரமாகாந்துக்கு அதிர்ச்சியாக இருக்கிறது. தைரியமிழந்து நிற்கிறான்) ரம்மியா? உன் கார்டை காட்டு பார்க்கிறேன். (பார்த்துவிட்டு) ஹூம்...இந்த மானிக் என்ன முட்டாள் தனம் பண்ணியிருக்கா பாரு. விளையாட்டே புரியலே. இந்த பொம்பளைங்களே சீட்டை கையில பிடிக்க வேண்டியது, பொத்துனு போட வேண்டியது. இதான் சீட்டாட்டம், எழவு மூளையே இல்லே. இல்லாட்டி நான் டிக்ளேர் பண்ணியிருக்க வேண்டியது.

(உமாகாந்த் அமைதியாக மற்றவர்களுடைய பாயிண்டுகளை எண்ணிக் கொண்டிருக்கிறான்)

உமாகாந்த் : (மானிக்கிடம்) ஒரு ரூபா இருபது பைசா எடுத்துவை, (ரமாகாந்திடம்) நீ ஒண்ணு இருபத்தஞ்சு. போன ஆட்டத்தில தரவேண்டியது நாலேகால். அஞ்சரை ரூபாயை எடுத்துவை.

ரமாகாந்த் : உம்யா, எழவு மஹா அல்பம்டா நீ. ஆமாம் நீ எப்படி எப்பவும் ஜெயிச்சுக்கிட்டே இருக்கே? தேவிடியாபையா!

(உமாகாந்த் கார்டுகளை நன்றாக குவிக்கிறான்) கடைஞ்செடுத்த தேவிடியாப்பய!

உமாகாந்த் : ஒன்னோட உடன்பிறப்புடா. சரிசரி கக்கு கக்கு. முதல்லே பணத்தை எடுத்து வை. உம் நீயுந்தான் நீல ஜட்டி.

மானிக் : சொல்லிட்டேன், கண்டபடி பேசாதே.

உமாகாந்த் : பணத்தை எடுத்து வச்சிட்டா ஏன் பேசறேன் நான்.

மானிக் : அப்புறம் தர்றேன்.

உமாகாந்த் : அப்புறம்? அப்புறம் எப்புறம்? நான் என்ன அந்த ஹோண்டூர் பயன்னு நினைக்கறியா? முதல்லே பணம். சரக்கு அப்புறம்.

ரமாகாந்த் : நாங்க கொடுக்காட்டி நீ என்னடா பண்ணுவே?

உமாகாந்த் : நான் என்ன பண்ணுவேன்? உங்களை கக்கவைப்பேன். நாக்கை இழுத்து வெளியில தொங்க விட்டுடுவேன்.

மானிக் : நாங்க எங்கேயும் ஓடிப் போய்டமாட்டோம். ஒண்ணேகால் ரூபா பிசாத்துக் காசு.

உமாகாந்த் : (அவள் கழுத்தைக் கைப் பற்றி) பணத்தை எடுத்துவை.

ரமாகாந்த் : மானிக்! கொடுக்காதே! எழவு என்ன பண்றான்னு பார்ப்பம்.

மானிக் : ஓ...நீ என் கழுத்தை முறிச்சிடுவியா! என்னை விடு...என்னை விட்டுடு. உம்யா நான் போறேன்.

ரமாகாந்த் : உம்யா, எழவு இவளை போகவிடாதே. எழவு பணத்தை வெளியில எடுத்திடு. இதபாரு எப்படி நெளியறா. எழவு கழுத்தை நசுக்கி எறிடா! முறுக்குடா!

மானிக் : சொல்லிட்டேன் நான். அப்புறம் கொடுத்திடறேன். இப்ப என் கிட்டே பணம் இல்லை. எல்லாம் செலவழிஞ்சு போயிடுச்சு.

ரமாகாந்த் : அந்த ஹோண்டூர் பய கிட்டே பணம் கறக்க நீ என்ன காரியம் பண்ணுவே?

மானிக் : (ஆக்ரோஷத்துடன் உதறி கழுத்தை விடுவித்துக் கொண்டு) ரம்யா, அளந்து பேசு. அதுக்கும் பணத்துக்கும் எந்த சம்பந்தமுமில்லே, சொல்லிட்டேன்.

ரமாகாந்த் : கேளுடா தம்பி. பணத்துக்கும் அதுக்கும் சம்பந்தமில்லையாண்டா. பின்னே எழவு அதுக்கும் எதுக்கும் சம்பந்தம்?

அவன் இவளைக் கல்யாணம் கட்டிக்கப் போறானா இல்லாட்டி...? கல்யாண வைபோகந்தானே? ஹோண்டூர் சமஸ்தான மஹாராணிதானே?

மானிக் : (ஆத்திரத்தில்) : அவரு என்னை...

ரமாகாந்த் : மானிக் கண்ணு. I pity you...ரியலி. Poor soul...அவன் உன்னை வச்சுக்கப் போறான்னா அது வேற விஷயம். இந்த எழவு காலத்தில இது ஒண்ணும் அப்படி மோசமான விஷயமில்லை. சரி, நம்மகாலம் எப்படி இருக்கு? வியாபாரம் எழவு நொடிச்சிக் கிடக்கு. யாராவது ஒன்னை வச்சுக் கிட்டா நீயாவது பிச்சையெடுக்காம பொழச்சுக்கலாம்.

மானிக் : நோ...நோ...நோ... அவரு என்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறாரு.

ரமாகாந்த் : ரியலி, தம்பி...

மானிக் : என் மேலே அவருக்கு அளவு கடந்த காதல். தெரிஞ்சுக்குங்க.

ரமாகாந்த் : (சிரித்தபடி) கிழிஞ்சுது போ! தம்பி, இவ சொல்றதைக் கேட்டியா? (தன் இரு கைகளை ரம்யா விடம் கொடுக்க அவன் அக்கைகளைத் தட்டுகிறான்) மேன்மை தங்கிய ஹோண்டூர் மஹாராஜாவும் நம்ம குட்டி மானிக்கும்! காதல் விவகாரம்! காதல்! ரோமியோ-ஜூலியட்! லைலா-மஜ்னு அந்த எழவு ஹோண்டூர் மஹாராஜாவுக்கு ரெண்டு சம்சாரங்கள் கொடுத்த ஆறு குழந்தைங்க இருக்கு! (வெடிச்சிரிப்பு சிரிக்கிறான்)

உமாகாந்த் : இன்னும் நம்ம குட்டி மானிக் கொஞ்சம் முட்டாளாத்தான் இருக்கு.

மானிக் : பரவாயில்லே! சத்யம் பண்ணிக் கொடுத்திருக்காரு. உனக்கென்ன தெரியும் அதைப் பத்தி?

ரமாகாந்த் : ஹா! செமத்தியாத்தான் பண்ணியிருக்காரு, சத்யம், ஹோண்

டூர் மஹாராஜா குட்டி மாணிக்குக்கு சத்யம் செஞ்சு தர்றார். எழவு காதல்! எழவு கல்யாணம் பண்ணிக்கப் போறாரு. இனிமே என்னால சிரிக்க முடியாதுப்பா!

உமாகாந்த்: இது நடக்காது! மானிக் கொஞ்சம் புத்திசாலித்தனமா நடந்துக் கிட்டா.

ரமாகாந்த்: எது நடக்காது? கல்யா ணமா?

உமாகாந்த்: வயிறு பெருத்து வெளி யில தெரிஞ்சா—

மானிக்: (அதிர்ந்து போய் உம்யா வின் முகத்தை திருப்பி) வாயை மூடித் தொலையேன் உம்யா!

ரமாகாந்த்: ஓ! See! அவனை சிக்க வைக்கணும் அப்படித்தானே? கசமுசாவா கல்யாணமா? பிளாக்மெயில் பண்ணு ஈசியா முடியும்.

மானிக்: (சினத்துடன் எழுந்து) நான் கிளம்பறேன். (விரைந்து சென்று கதவைத் திறந்து வெளியேறி மாடிப் படியில் நிற்கிறாள்)

உமாகாந்த்: (அவளைப் பின் தொடர்ந்து வயிற்றைத் தள்ளிக் கொண்டு கர்ப்பிணி பெண் போல் நடந்து) வயிறு ஆடுது! நிச்சயம் அதான்.

ரமாகாந்த்: நான் என்ன சொன்னேன்.

உமாகாந்த்: ஒரு மாதிரியா நடக்கறா

ரமாகாந்த்: டேய், ஏதோ விஷயம் நடக்குதுடா!

உமாகாந்த்: நிச்சயமா!

ரமாகாந்த்: ஏதோ விஷயம் நடக்குது தம்பி! ஹோண்டூர் மஹாராஜா ஒரு மரமண்டையா இருப்பான் போல இருக்கு.

உமாகாந்த்: யெஸ்.

ரமாகாந்த: தம்பி, நம்ப குட்டிமானிக் கும் ஒரு மரமண்டைதான் (தன் பொட் டில் கைவைத்து) மூளையே இல்லை. துளிக்கூட இல்லை. நம்ம யாருடா? அவளோட அண்ணன்க. சொந்த அண்ணன்க. நாம அவளுக்கு உதவ ணும். கைகொடுக்கணும்டா கஷ்டத் தில. என்ன?

உமாகாந்த்: மேல போ.

ரமாகாந்த்: அந்த ஹோண்டூர்பயலை பிளாக்மெயில் பண்ணினா என்ன? நாமே?

உமாகாந்த்: மானிக்கை கல்யாணம் பண்ணிக்க சொல்லியா?

ரமாகாந்த்: ஓ, நோ, நோ, நோ. அதில்லடா தம்பி, சொல்றேன் கேளு. "அவ கர்ப்பமா இருக்கா. கஷ்டமான நிலைமை. காதுக்கு காது வச்சாப்பல விஷயத்தை முடிக்கணுமா, கழட்டு இருபதாயிரமோ இல்லாட்டி நீ விருப் பப்பட்டா இன்னும் கூடவோ...இல் லாட்டி எழவு வெளியில சொல்லிடு வோம்! எழவு பேப்பர்ல அல்லோலகல் லோலப்படும்.

செஞ்சு பார்ப்போம்.

உமாகாந்த்: (நடைப்பழகி) நீ சொல்ற திலியும் அர்த்தம் இருக்கு.

ரமாகாந்த்: (அர்த்தமா) தேட்றே! குருட்டு அதிர்ஷ்டம்டா! எழவு குருட்டு

அதிர்ஷ்டம்! காலம் எப்படி மாறிடுச்சு பார்த்தியா. நீ நெத்தி வேர்வையை நெலத்தில கொட்டினாக்கூட நெனச்சுக்கூடப் பார்க்கமுடியாத பணம். பீடை நாமள்ளாம் உழைச்சு உழைச்சு செத்தொழியணும். இப்பல்லாம் இது நல்லவனோட உலகமில்லடா! எப்படி என் ஐடியா? அட்டகாசமாயிருக்கில்லே!

உமாகாந்த் : லுக் ஹியர்! குட்டிமானிக்குக்கு இது கொஞ்சம்கூட தெரியக் கூடாது. மண்டையில இறுக்கமா போட்டு வச்சுக்க இதை.

ரமாகாந்த் : ஹா! இதைப் போயி யாரு சொல்லப் போறாங்க அவள் கிட்டே. அவ காதல் பண்ணட்டும்! காதல் பிக்னிக்! ஒண்ணு சொல்றேன், ஹோண்டுர் மஹாராஜா இப்பவோ அப்பவோ அவளைக் கைவிட்டுடப் போறான்! சத்தியம் வேணா பண்றேன். எழவு ஆம்பளைங்களே இப்படித்தான் எப்பவும். உண்டா இல்லையா? இந்த மொத்தக் கூட்டமும் அயோக்கியப் பசங்க! எழவு எல்லாரும் மோசக்காரனுங்க!

உமாகாந்த் : சரிய்யா நாமளும் போறோம். அவளும் அங்கே வந்து நிக்கறா. அவளோட சேந்துக்கிட்டு நம்மளை அமுக்கிப் போட்டான்னா?

ரமாகாந்த் : அதையெல்லாம் மறந்திடுடா தம்பி! ரொம்ப சிம்பிள். மானிக்கை ஒரு ரூமில் போட்டு பூட்டிடுவோம்.

உமாகாந்த் : அப்ப அவ புரிஞ்சுப்பா!

ரமாகாந்த் : (சிறிது யோசித்து, விரலை சொடக்கி) விபத்து! உனக்கு இந்த வார்த்தை பிடிச்சிருக்காடா தம்பி? ஏற்பாடு செய்வோம். மானிக் கையை ஒடச்சுக்கிறா... இல்லாட்டி எழவு காலை ஒடச்சுக்கிறா. அப்ப எப்படி போகமுடியும் வெளியில? பிளாஸ்டர் கட்டு! பிளாஸ்டர் கட்டு கட்டிக்கிட்டு கசமுசான்னு இருந்தா எப்படிடா காதல் வரும்? ஒத்துக்கறியா இல்லையா?

உமாகாந்த் : யோசிப்போம்!

ரமாகாந்த் : யோசிக்கிறியா? போடா, யோசி. முடிவு பண்றப்பவும் யோசிக்க ஆரம்பிப்பே! எழவு அழிஞ்சு போ. தம்பி செயல்தாண்டா முக்கியம்! நீ உருண்டு பிரண்டாலும் இதுமாதிரி சான்ஸ் கிடைக்குமா? இப்பல்லாம் ராஜாக்களே கம்மி ஆயிட்டாங்க! இருபதாயிரம் அவசியம் தேவை. உனக்குப் பத்து. எனக்குப் பத்து. Fifty—Fifty என்ன? நீ சரின்னா முடிவு பண்ணிடலாம். அவளைக் கூப்பிடலாம். (உமாகாந்த் யோசித்தபடி வெளியேறுகிறான். ரமாகாந்த் புதிய ஐடியாவால் சிறிது நேரம் மதிமயங்கி நிற்கிறான். திடீரென்று நாடகபாணியில், அன்பு கொப்பளிக்கும் குரலில்) ரமா, ரமா, ரமா கண்ணு!

(ரமா வருகிறாள்)

இங்கே, இப்படி! கொஞ்சம் இப்படி உட்காரு! உனக்கு ஓய்ச்சல் ஒழிவில்லாத வேலை! அப்படியே ஓஞ்சு போயிடறே! இந்த வீட்ல எழவு ஒரு சமையல்காரன் இல்லே. இந்த வேலைக்காரன், கிராமத்துக்குப் போறேன்னு போனவன்தான். வர்ற

சுவடே தெரியலே. தோட்டக்காரன். தேவடியாப்பய. இவங்களுக்கெல்லாம் எப்பவும் பணத்திலதான் குறி! பணம் இல்லாட்டி கிளப்பிடுவாங்க பயணம்! எழவு மரியாதை நேர்மைலாம் எங்கே இருக்கு? ஒக்காந்துக்கிட்டு உத்தரத்தை எண்ற பசங்க! ரமா, ஒரு சமையற்காரனைப் பார்த்து விசாரிச்சேன்! பஸ்ட் கிளாஸ் பய! பழுத்த அனுபவம் உள்ளவன்! பெரிய மனுஷங்க வீட்டிலல்லாம் வேலை பார்த்திருக்கான். நமக்குக் கூட கொஞ்சம் செலவுதான். இருந்தாலும் கௌரவமா வாழணும்னா காசைப் பார்க்கக் கூடாது. நீ பார்ப்பியா? ரமா, நாம ஒரு கார்கூட வாங்கிக்கணும். கார் வேணும். எழவு மலிவாகத்தான் இருக்கு. இப்ப ஒரு பிசினஸ் நடந்துக்கிட்டிருக்கு. அது முடிஞ்சா கார் வாங்கிடலாம் அப்ப சிமாட்டி ரமா கார்ல பறப்பாங்க! கிளப்புக்கு போவாங்க! சோஷியல் ஒர்க் செய்வாங்க! ரமா டியர், ஏன் திடீர்னு நீ ஒல்லியா போயிட்டே. இந்த பாலு வெண்ணெய்லாம் நிறய சாப்பிடணும் என்ன? நெறய ரெஸ்ட் எடுத்துக்கணும். சேஞ்ச் ஆப் கிளைமேட், சேஞ்ச் ஆப் வெதர் வேணும். அதான் பெஸ்ட் குழந்தை என்னிக்கு வேணுமானாலும் பெத்துக்கலாம். இன்னிக்கில்லாட்டி நாளைக்கு, என்ன? நான் என்ன சொல்றேன்னா இதெல்லாம் நம்ம கையில இல்லை. சில பேருக்கு எழவு டஜன் குழந்தைங்க பொறக்குது. சில பேருக்கு ஒண்ணே ஒண்ணு. இதில என்ன நியாயம் இருக்கு! சனியன் என்ன அதிர்ஷ்டமோ...

(நினைவில் மூழ்குகிறான்)

சரி நீ போ ரமா! போய் ஒன் வேலையைப் பாரு! வேலையை எப்படி அப்படியே போட்டுட முடியும். வேலை செஞ்சுதான் ஆகணும். நாம அப்புறம் பேசுவோம். என்ன? (ரமா போகிறாள், அவள் போனதும் ரமாகாந்த் உள் வாசல் கதவுகளை மூடுகிறான். டெலிபோன் ரிசீவரை எடுத்து கீழே வைக்கிறான். பக்கத்திலுள்ள அலமாரியிலிருந்து சோடாபாட்டிலை எடுத்து உடைக்கிறான். உமாகாந்தும் மானிக்கும் வருகிறார்கள். அவன் வந்தவுடன் அலமாரியிலிருந்து டின் ஓப்பனரை எடுக்கிறான். நேராக வரும் மானிக் ரமாகாந்தின் மேல் மோதிக் கொள்கிறாள். உடைந்த பாட்டிலைக் கையிலேந்தி நிற்பதைப் பார்த்து அலறுகிறாள். திரும்புகிறாள் பின்னால் உமாகாந்த் நிற்கிறான். வாயிலிருந்து அவளுக்கு வார்த்தை வருவதேயில்லை. மெல்ல பின்னே செல்கிறாள். (ஒளி மங்குகிறது)

(கனமான பொருட்கள் தரையில் விழுந்து நொறுங்கும் ஓசை)

காட்சி-2

ஒளி பரவுகிறது. புள்ளினங்கள் எழுப்பும் ஒலிகள். ரமா புடவைத் தலைப்பால் எதையோ மறைத்து கார் ஷெட்டை நோக்கி வருகிறாள். கதவை மிகவும் மெல்லத் தட்டுகிறாள். கதவைத் திறப்பார்களோ என்ற ஐயம். உள்ளே யாருமில்லை. மீண்டும் தட்டுகிறாள். அமைதி. மீண்டும்தட்ட கையை உயர்த்துகையில் கதவு திறக்கிறது. ரஜனிநாத் தோன்றுகிறான் வெறுப்புடன். கண் இமைகள் கனத்துக்கிடக்கின்றன. தலை

கலைந்து கிடக்கறது. ரமா கிளம்பு கிறாள் ஒரு நிமிடம் நிற்கிறாள். ஆசையின் துடிப்பால் அவனுடைய வெற்று மார்பை கள்ளத்தனமாக நோக்குகிறாள். அவன் அவள் முகத்தைப் பார்க்கிறான். அவள் குளறுகிறாள்.

ரஜனிநாத் : உள்ளே வாங்கன்னு நான் சொல்லணுமா?

(அவள் உள்ளே வருகிறாள்)

போங்க போங்க, வாழ்க்கை முழுக்க நடுநடுங்கியே காலத்தைக் கழிச்சாச்சு. உங்கமாதிரி ஜனங்களைப் பார்த்தா எனக்கு பத்திக்கிட்டு வருது. நீங்க யாருக்கு பயப்படணும்? அந்தக் கோழைப் பசங்களுக்கா?

ரமா : இன்னிக்கு உனக்கு என்ன ஆயிடுச்சு? (அவள் குரலே இன்று ஏதோ ஆகிவிட்டது என்று சொல்வது போல இருங்கிறது)

ரஜனிநாத் : எனக்கு என்னென்னவோ ஆயிடுச்சு. இப்ப எனன? எப்ப வந்தான். என் ரத்தம் கலப்பட ரத்தம். என் குடும்பத்திலயும் இதே விவகாரந்தான். முதல்ல உங்க ரத்தம் கலப்படமாயி நாறும். அப்புறம் மூளைசீரழியும். அப்புறம் உடம்பு முழுக்க, மிருகம் கோபத்தில சிலிர்க்கறாமாதிரி சிலிர்த்து ஓட ஆரம்பிக்கும் ரத்த வேட்கை எடுக்கும். நம்ம மனுஷத் தன்மையே நாசமாயிடும். (கதவைத் தாளிடுகிறான்)

ரமா : (திடீரென்று) வேண்டாம்! கதவைச் சாத்தாதே (அவன் அதிர்ச்சி அடைகிறான்) ஏன் கதவைச் சாத்தறே? கேக்கறேன் இல்லே?

(தரையைப் பார்க்கிறாள். அவள் மாற்றம் தெளிவாகத் தெரிகிறது. தொடர்ந்து கள்ளத்தனமாக அவனது திறந்த மார்பை நோக்குகிறாள்)

ரஜனிநாத் : உங்களுக்கும் என்னென்னவோ ஆயிடுச்சுன்னு நெனைக்கறேன் (சென்று அவள் அருகில் நிற்கிறான் அவளைப் பார்க்கிறான். அவள் விசனத்துடன் நிற்கிறாள்) என்ன விஷயம்?

ரமா : (குழப்பமடைந்து, தெளிவற்று) ஏன்? ஒண்ணுமில்லை. ஒண்ணுமில்லையே. நெஜம்மா ஒண்ணுமில்லை.

(தன்னையுமறியாமல் அவன் வெற்று மார்பின் மீது பார்வையைச் செலுத்துகிறாள்)

ரஜனிநாத்: அப்ப எங்கிட்டே கொடுங்க. கொடுக்கணும்னு நெனைச்சு கொண்டு வந்ததை.

ரமா : (போலித்தனமற்று) என்ன? என்ன கொடுக்கணும்?

ரஜனிநாத் : டீ. நீங்க ஏதோ கொண்டு வரலை?

ரமா : (சேலையின் தலைப்பில் மறைத்து வைத்துள்ளதை நினைவு கூர்ந்து) என்ன மடத்தனம்பாரு. மறந்தே போயிட்டேன். இதோ ஸ்வீட் நான் பண்ணினது.

ரஜனிநாத் : (ஒரு ஸ்வீட்டை வாயில் போட்டு அவள் தந்த தட்டை மேஜை மீது வைத்து) உங்க கைபட்டா மண்ணு கூட ஸ்வீட்டா மாறிடும்.

ரமா : (மிகுந்த நாணமடைந்து) அய்ய...என்ன உளர்றே?

(அவள் சேலை நுனியை முறுக்கி

விளையாடிக் கொண்டிருக்கிறாள். இத் தருணம் அவளில் நேர்ந்த மாற்றத்தை அவன் அனுபவித்துக் கொண்டிருக் கிறான். குதூகலத்துடன் இன்னொரு ஸ்வீட்டை உள்ளே தள்ளுகிறான்.

எப்படியிருக்கு ஸ்வீட்? மறந்தே போயி ருச்சு. உன்னைக் கேட்கவே கூடாது. உங்களுக்கெல்லாம் ஏதுவும் ருசிக்காது எதுக்கும் நிறம் கிடையாது. எதிலியும் அழகு தெரியாது.

ரஜனிநாத் : (ஸ்வீட்டை மென்றபடி) ருசி தெரியாத நாக்கு. எதுவும் அதற்கு ருசிக்காது.

ரமா : எங்கே அந்த மாதிரி மூஞ்சி வச்சுக்க இன்னொருதரம்? வச்சுக்கோ யேன்? வெளக்கெண்ணெய் விழுங்கின மாதிரி.

ரஜனிநாத் : சிரிக்கறதுக்கு உங்களுக்கு ஒரு சாக்கு.

ரமா : ஆமாம்! நீ பிறத்தியாரை சிரிக்க வச்சிடுவே! சட்டுபுட்டுனு ஒருத் தரை அழவேணா வைப்பே.

ரஜனிநாத் : நான் ஒங்க புருஷனோட தம்பிதானே!

ரமா : (தீர்மானமான பாணியில்) நாம அதை மறந்திடுவோம். வேற எதைப் பத்தியாவது பேசுவோம். எவ்வளவோ விஷயங்கள் இருக்கு.

ரஜனிநாத் ; (சுருட்டி வைக்கப்பட்ட பாயின் மீது உட்கார்ந்து) உங்களுக்கு எங்கேயாவது அவசரமா போகணுமா?

ரமா : அவசரமே வாழ்க்கைன்னு ஆன அப்புறம் அதுக்கு தனி அர்த்தம் வேற இருக்கா?

(அவள் பார்வை அவன் உடம்பையே வட்டமிடுகிறது)

ரஜனிநாத் : என்ன பார்க்குறீங்க?

ரமா : (திகைப்படைந்து) என்ன? ஒண்ணுமில்லை.

ரஜனிநாத் : ராத்திரி முழுக்க வெந்து செத்தே போயிட்டேன். பொட்டுகாத்து இல்லை. அப்புறம் என்ன? தூங்கவே இல்லை. சட்டையைக் கழட்டிவச்சிட்டு பேப்பர்ல கிறுக்கிகிட்டு கிடந்தேன். நீங்க வந்ததினால நிஜாராவது போட் டிருக்கேன். இல்லாட்டி அண்டர் வேரோடதான் இருப்பேன்.

ரமா : (தவிர்க்க முடியாமல்) உங்க அண்ணிக்கு முன்னால நீ இந்த மாதிரி லாம் வேஷம் போடவேண்டாம் பல வருஷமா நான் பார்த்து வளர்ந்த பையன் நீ.

ரஜனிநாத் : நெஜந்தான். நீங்க ஒன் பது கெஜ புடவை கட்ட ஆரம்பிச் சிட்டீங்க. சின்னப் பொண்ணுமாதிரி பாவாடை தாவணி போடவேண்டிய வயசில. நான் உங்களை நல்லா பார்த்தமாதிரி கூட ஞாபகம் இல்லை.

ரமா : (கலவரமடைந்து) இது மாதிரி லாம் நீ பேசக்கூடாது...உன் கவிதை களை படிச்சுக் காட்டேன்.

(தரையில் உட்காருகிறாள்)

ரஜனிநாத் : (ஆச்சரியத்துடன்) உங்க கிட்டேயா? ஏன் உங்ககிட்டே? நீங்க குண்டுகுண்டா சாமி படம்லாம் வச்சி ருக்கிற ஆளு. பிள்ளையார், கிருஷ்ணர் இந்த உருண்டையான குழந்தைங்க படத்தை எத்தனை வருஷமா சொத்தா கட்டிக்காப்பாத்தி வந்திருக்கீங்க! உடம்

புச்கும் கைகாலுக்கும் ஒண்ணுக்கொண்ணு ஒத்துப்போகாத ரூபங்கள் பஞ்சை வச்சு அடச்சாமாதிரி உடம்பு! நீங்க பொம்பளைங்க சொல்லுவீங்களே கொழுக் மொழுக்குனு. பளபளப்பா அந்தமாதிரி! (வேகத்துடன்) நெஜத்தில குழந்தைகள்ளாம் அப்படியில்லை!

ரமா : (வருத்தத்துடன்) எனக்கு அதுங்கள்ளாம் இப்படித்தானிருக்குன்னு எப்படித் தெரியும்?

(தொண்டையை ஏதோ அடைக்கிறது)

ரஜனிநாத் : (தன் தவறை உணர்ந்து) நான் ஒண்ணும் அந்த அர்த்தத்தில சொல்லலே.

ரமா : அப்படித்தான் சொன்னே? ஏன் மறுக்கறே?

ரஜனிநாத் : (பாயிலிருந்து எழுந்து தரையில் அவளருகில் அமர்ந்து) மறந்து போய்...வெரி சாரி! உங்க கால்லே வேணா விழட்டுமா?

ரமா : இப்படி விழ ஆரம்பிச்சா அப்புறம் அதுக்கு முடிவே இருக்காது! நீ மறந்து போயிட்டே 'மறந்து போயிடுச்சு'ன்னு ஒரு சுதந்திரம்.

(அவன் உதவியற்று அமைதியாய் நிற்கிறான்)

ஆனா அந்த 'மறந்து போறது' அது கூட கிடைக்கறதில்லை. தெனம் தெனம் மரணம். புதுசு புதுசா மரணம். ஆயிரம் கோடி மரணம். சப்தகோடி ஊசிகளை உன் இதயத்தில ஏத்தற மாதிரி வலி. உன்னைக் குருடா அடிக்கற பைத்தியமாகப் பண்ற வலி.

(தன் மார்பை அழுத்திக் கொள்கிறாள். எழுந்திருந்து ஒரு பக்கம் செல்கிறாள்)

உன்னால் சகிக்கமுடியாது அதை. உன்னால விடுபடவும் முடியாது. ஒத்துப்போகவும் முடியாது. உன்னால் எறியவும் முடியாது. ஒரு துண்டுகூட. துளிகூட தூக்கி கல்ப லட்சம் ஊசிகள் இது மாதிரி, ஒவ்வொரு விநாடியும் முடிவில்லாத விநாடிகள், ஒவ்வொருநாளும் முடிவில்லாத நாட்கள். நீண்ட நீண்ட நாட்கள். முடிவே இல்லாத வருடங்கள் இப்படிப் பலப்பல வருடங்களை நான் தாங்கிட்டு இருந்திருக்கேன். டல வருடம். என் வாழ்க்கை முழுக்க தெரியுமா உனக்கு? ஒரு வார்த்தைகூட பேசாம. சொட்டுக் கண்ணீர் கூட விடாம.

(அவன் அமைதியாக இருக்கிறான்)

கொஞ்சம் கூட ஓயாம, முணுமுணுக்காம, முகஞ்சுளிக்காம. ஆனா இது எவ்வளவு தூரம் போகணும்?

(அவனருகே முட்டி போட்டு உட்கார்ந்து அவன் தோள்களில் கைவைத்து)

எவ்வளவு காலம் இதை நான் பொறுத்துக்கிட்டிருக்கணும்? இந்த ஊசிகளை எத்தனை காலம் இதயத்தில ஏந்திக்கிட்டு நிக்கணும்? எத்தனை காலத்தை கண்ணீருக்கு அணை கட்றதிலேயே கழிக்கணும்?

(தன்னை அடக்கிக் கொள்கிறாள். கையை வேகமாக இழுத்துக் கொள்கிறாள். நகர்கிறாள். அவன் மௌனியாக நிற்கிறான்)

ஒரு நாளைக்கு கட்டுப்பாட்டை இழந்திடுவேனோன்னு பயப்படறேன். ஒரே ஒரு நொடி. அப்ப கண்களிலிருந்து

ரத்தம் அருவியாகப் பாயும். கிழிஞ்சு தூள்களான குடலும் இதயமும் வாய் வழியாக வந்துவிழும். ஒண்ணும் மிச்ச மிருக்காது. ஒண்ணுமே மிச்சமிருக்காது அதோடு எல்லாமேமுடிஞ்சுபோயிடுமா? முடியாது. அப்புறம். அப்புறம்...நான் என்ன ஆவேன்?

(ஒரு அசைவு அசைந்து அவனிடம் செல்கிறாள்)

எனக்கு என்ன நேரும்? தம்பி, நான் என்ன ஆவேன்? அவர் சொல்ற தெனம் ஒரு மாந்திரிகன், சாமியார், ஜோசியன் வைத்தியன் இப்படி பல கற்பாறையில தலையை மோதிக்கிட்டு, அதே கேள்வியை அவங்ககிட்ட திருப் பித் திருப்பி கேட்டுக்கிட்டு, அவங்க குடுக்கிற விபூதி, அட்சதை, தாயத்தை வாங்கிக்கிட்டு, சொல்ற ஆயிரம் விரதங்களை இருந்துக்கிட்டு பைசா பொறாத மந்திரங்களை உச்சரிச்சுக் கட்டு ஆனா உண்மை என் மனசுக்கும் அந்தக் கடவுளுக்கும்தான் தெரியும்.என் கணவர்கிட்டே சொல்ல முயற்சிப்பேன் இரும்புக்கும் மேலான உறுதியோட மனசைத் தயார் பண்ணி சொல்ல நினைச்சா? சொல்லி என்ன பிரயோ ஜனம்? அதால எங்களுக்குள்ளே என்ன புரிபடப் போவுது? மிருகத்தனமான உறுதி மொழிகள்தான் மிச்சமாகி நிற் கும். நசிந்து போற நம்பிக்கைகள்... குஷ்டத்தை விட பயங்கரமான முயற்சி கள்...அவருக்கு பரிபூரணமான ஆசி களை கொடுத்திருக்கிற குடிதேவதை! குடி! உலகத்தில இருக்கிற அத்தனை மதுபானங்களையும் குடிச்சுத் தீர்க்க முடியுமா? கிடையாது. தொடர்ந்து இரவுப கலா குடிச்சாக்கூட ஏன் இது அவருக்கு புரியமாட்டேங்குது? பண்டி தர்கள், வைத்தியர்கள், ரிஷிகள், முனி வர்கள் காயகல்பவியாபாரிகள் இவங் கள்ளாம் இந்த உலகத்தை விட்டுக் காணாமல் போயிடணும்னு அடிக்கடி ஆசைப்படறேன். குறைஞ்சது, ரெண்டு வாரமாவது! முட்டாள்தனமான ஆசை தான். ஆனா ஆசைப்படறேன். அப்ப வாவது ஒரு நொடியாவது அவருக்கு உண்மை விளங்கும். இது வைத்தியர் கள், ரிஷிகள் முனிகளோட தவறில்லை என்னோட தவறுமில்லை, என் கருப்பை பசியோட ஆரோக்கியமா நல்லபடியா இருக்கு. சத்தியமா, நான் தாயாகப் பொறந்தவள்தான். நிலம் செழுமையான நிலந்தான் ஏங்கிநிக்கிற பூமிதான். ஆனா விளையமாட்டேங் குதே!

விதை பலஹீனமா இருந்தா, விஷம் கலந்ததாக இருந்தா, மெலிஞ்சு போயிருந்தா, குணம் குறைஞ்சுபோயி ருந்தா நிலத்தை ஏன் குற்றம் சொல்ல ணும்? நிலம் விளைய விதையைச் செழுமை பண்ணிக்காப்பாத்த கடவுளை சாட்சியா வச்சு உயிரைப் பணய மாக்கி பாடுபட வேண்டாமா? அயராத நம்பிக்கையோட சிறிய தலை யணையை இரவு பகல் கனவென்கிற நூலால தச்சுக் காக்கவேண்டியது தானா? சுருங்கிச் சுருங்கி அந்த விதை மடிய வேண்டியதுதானா? இந்த கனவு களும் நம்பிக்கைகளும் கைவிட்டுவிட்டு பறந்து போயிடுமா? ஒரு தடவை இல்லை. ரெண்டு தடவை இல்லை. பலதடவை அதேதான். சொட்டு தீர்

கூட முழுங்காம நிலம் தாகத்தால எரிஞ்சு எரிஞ்சு சாகும். உண்ணா விரதத்தை தவிர வேறு எதுவும் இல்லையா?

இதே விஷயந்தான் அப்பவும். பணசை தொட்டுச் சொல்லு தம்பி. தாங்க முடியாத தாகம். பயங்கரமான வறட்சியும் பட்டினியுந்தான் பதிலா? நாளுக்கு நாள், மாதாமாதம், வருஷா வருஷம், காலாகாலம். சொல்லு, ஒருத்தருக்கு என்ன ஆகும்? உன் மூச்சுக்கு ஒரு சாவு வருமா வராதா? (ரஜனிநாத் விருட்டென்று அவள் கைகளைப் பற்றி தன்னிடம் இழுக்கிறான், அவள் விடுபட்டு திரும்பி நிற்கிறாள்)

முந்தி காலத்தில மனைவிகள் உடன் கட்டை ஏறினாங்க. நாம அவங்களை வாயாரப் புகழ்ந்தோம். செத்துப்போன கணவனுக்கு செய்யக்கூடிய தர்மமா நெருப்பில குதிச்சு தங்களை மாய்ச்சுக் கிட்டாங்க. ஆனால் அது ஒரே ஒரு தடவைதான். நெருப்பில விழுந்தா வேதனையிலிருந்து விடுபடலாம். ஆனா ரஜனி, இந்த மனைவியா, செத்துக் கிட்டிருக்கிற உயிர் வாழ்க்கையில நான் ஒவ்வொரு கணமும் உடன்கட்டை ஏறிக்கிட்டிருக்கேன். ஒனக்கு ஒண்ணு தெரியுமா? ஒன்கிட்டே பொய்சொல்ல மாட்டேன். இப்பல்லாம், சில வருஷங் களா, ஒவ்வொரு நாளும் இதிலிருந்து விடுபட்டுக்கிட்டிருக்கிற மாதிரி உணர் றேன். இதிலிருந்து விடுதலை பெர்ற மாதிரி. ஏதோ ஒரு விதத்தில இந்த உலகம் என்ன வேணா பேசட்டும். எனக்கு கவலையில்லை. ஒருத்தர் தனக்குத்தானே நெருப்பை வச்சிக்கிட்டு சாகலாம். இல்லாட்டி அவருக்கு ஏதாவது கொடுத்து — விஷத்தை— கொடிய விஷத்தை கொடுத்திடலாம். கதை, நாவல்கள்ளே இந்தக் கெட்ட பொம்பளைங்க நல்ல ஆம்பிளைங்க ளுக்கு கொடுக்கறமாதிரி. அப்புறம் இவர் எழுந்திருக்கவே மாட்டார். அப் புறம் இந்த மாதிரி புதுசுபுதுசா சாமி யார் ஜோசியர் சந்நியாசியை கைகா மிச்சு விடமாட்டார். அப்புறம் குடிச்சிட்டு படுக்கைக்கு வந்து என்னைப் பாடு படுத்தமாட்டார். நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு என்னைப் பார்த்தபடி குழந்தைகளைப் பத்தி பேசமாட்டார். அதுக்கப்புறம் அந்த நெருப்பு கொழுந்துவிட்டு எரியாது.

விரதம்லாம் இருக்கவேண்டாம். நெறய வீடுமானியம் சகலமும் சுலபமாயிடும். என்ன செய்யணும்னு எனக்கு தெரியும். அதை இப்ப செய்யப் போறதில்லை நான். எப்படிச் செய்யலாம்கறதை கண்டுபிடிக்கற தைரியமே வரல்லே. அந்த அதிர்ஷ்டம் எனக்கில்லை. இப்ப, இப்ப இருக்கறபடி நல்ல குடும்ப ஸ்திரியா, பத்திரமா இருக்கேன். தாயா இருக்கற சந்தோஷந்தான் இல்லே, நல்ல மனைவியாகவாவது இருக்கேன். நான் பலஹீனமானவ. பயந்த சுபாவி. தரமில்லாதவ. பிரயோஜனமில்லாதவ. கொஞ்சம், கொஞ்சங்கூட பிரயோஜனமில்லாதவ. (எழுந்திருக்கிறாள். ரஜனிநாத் சட் டென்று அவளைத்தடுக்கிறான். பிடிக் கிறான். இதை அவள் எதிர்பார்த்த வளே. அவன் பார்வையை அவள் தவிர்க்கிறாள்.)

போகவிடு. போகவிடு என்னை. யாரா வது முழிச்சிக்கப்போறாங்க. நான் போகணும் (அவன் அவளை போகவிடு வதில்லை. அவன் யோசித்தபடி அவளைப் பார்க்கிறான். விடுபட சிறிது முயற்சிக்கிறாள் அவள்) போகவிடு. போகவிடுன்கறேன்லே. போகவிடு. ஒண்ணுமில்லாததுக்கு உன்னைக் கஷ்டப்படுத்திட்டேன்.

(அவள் அவன் வெற்று உடம்பைப் பார்க்கிறாள் நான் ஏதோ உளறிக் கொட்டிக்கிட்டிருந்தேன். என்னென் னவோ பேசிட்டேன். மறந்திடு. எல் லாத்தையும் மறந்திடு. எல்லாமே பொய். ஒண்ணுகூட உண்மை இல்லை. நான்...நான் ரொம்ப சந்தோஷமா யிருக்கேன், நெஜமாவே...நான்...

(அவள் பார்வை சந்திக்கிறது. அவன் பார்வையில் விழுகிறாள். மந்திரத்தால் கட்டுப்பட்டதுபோல் இருவரும் ராட்சத மூச்சு விடுகின்றனர். அவள் அவனைப் பற்றிக் கொள்கிறாள். அவன் மார்பில் தலைசாய்க்கிறாள். அவன் அவளை ஆதரவாக அணைத்துக்கொள்கிறான்.)

நீங்க என்ன நெனச்சிக்கிட்டிருக்கே. எனக்கு லேட்டாவுது.

ரஜனிநாத் : நீங்க என்ன நெனச்சுக் கிட்டிருக்கீங்க (சுயப்பிரஞை வந்து அவன் விலகுகிறாள். அவன் அவள் தோள்களை இறுக்குகிறான்) அப்ப நீங்க என்ன ல்லாத்தியும் இவ்வளவு ஆவேசத் தோட கொட்டினீங்க? ஏன் இன்னிக்கு? ஏன்? ஏன் எனக்கு தெரிஞ்சதையெல் லாம் என்கிட்டே சொன்னீங்க? பதில் சொல்லுங்க...

(அவள் பார்வை கவிழ்கிறது)

ஒருத்தனோட வாழ்க்கையே ஒரு சுமையா இருக்கிறவன்கிட்டே ஏன் இதையெல்லாம் சொன்னீங்க? அது வும் உங்களைவிட வறண்டுபோன ஒருத்தன்கிட்டே? எதைநம்பிக்கிட்டிருக் கீங்க, நீங்க?

(அவள் பதிலிறுப்பதில்லை)

நான் தோற்றுப் போனவன். ஒரு உதவாக்கரை கவிஞன். வெத்து கருப்பை தான் உங்க வேதனைன்னு எனக்குப் புரியுது. என்னதான் பொறுத்துக்கிட் டிருந்தாலும் கருப்பையின் துயரம் தாளமுடியாத துயரம். என்னையும் இப்படி ஒரு துயரம் போட்டு வாட்டிக் கிட்டிருக்கு எரிச்சிக்கிட்டிருக்கு (அவன் அவளைப் போகவிடுகிறான், திரும்பு கிறான்) இரவுபகல் இதே காரணத்திற் காக. விதை. வியாதியால நலிஞ்ச விதை. மீதிலாம் நல்லா இருக்கு. முக்கியமான வேர் அழுகிட்டிருக்கு. ஒரு சாபத்தால என் மேல் உள்ள சாபத் தால. நம்ம மேல் உள்ள சாபத்தால். அந்த சாபத்திலிருந்து விமோசனம் கிடைக்கும்னா ஏன் அதை விரும்பக் கூடாது. (திரும்பி அவளை நோக்கி வத்து கைத்தலம் பற்றி) நான் அதற்கு உதவக் கூடியவனாயிருந்தா நான் ஏன் முடியாதுன்னு சொல்லணும்? ஏன்? கற்பு, களவு இதெல்லாம் நமக்கு இல்லை! நாம சபிக்கப்பட்டவங்க! நம்மோட சகலமும் சாபந்தான்! இந்த எரிஞ்சுக்கிட்டிருக்கிற மனசு, எரிஞ்சுக் கிட்டிருக்கின்ற உடம்பு.

(அவளை வெறியோடு அணைத்துக் கொள்கிறான் அவன். அவள் அதே

வேகத்தோடு அவனை அணைத்துக் கொள்கிறாள். இரு கைகளாலும் அவள் முகத்தை தாங்கிப் பிடித்து கண்களை உற்று நோக்குகிறான். பிறகு அவளைத் தள்ளி வைத்துவிட்டு திரும்பிக் கொள்கிறான்.

வெட்கத்தால் கைகளால் முகமலரை மறைத்துக் கொள்கிறாள். அவள் மெல்ல அவனை நோக்கி வந்து அணைத்துக் கொள்கிறாள். முதுகில் தலைசாய்த்துக் கொள்கிறாள்.)

(இருள்)

காட்சி மூன்று

ஒளி பரவுகிறது. பின்னிரவு. வரவேற்பு அறை. உமாகாந்த்தும் ரமாகாந்த்தும் போதை வெள்ளத்தில் சுற்றிவர பாட்டில்களும் கோப்பைகளும்.

ரமாகாந்த் : சீயர்ஸ் ஃபார் ப்ளடி ராஜா ஆப்ஃ ஹோண்டூர்.

உமாகாந்த் : நோ...நோ...! ஃபார் தி ப்ளடி சன் ஆப்ஃ எ ராஜா ஆப்ஃ ஹோண்டூர். சீயர் ஹிம்! சீயர் தி பிட்ச்.

ரமாகாந்த் : சீயர்ஸ் ஃபார் தி சன் ஆப்ஃ எ ராஜா ஆப்ஃ ஹோண்டூர் (குடிக்கிறான்) செல்லக்குட்டி மானிக்! செல்லக்குட்டி மானிக். ஹோண்டூர் மஹாராஜா ஹோண்டூர் மஹாராஜாவோட பொண்ணை கல்யாணம் பண்ணிக்கப்போறான்! பலே!

உமாகாந்த் : நேத்து ராத்திரி முழுக்க அவ ஊளையிட்டுக்கிட்டே இருந்தா.

ரமாகாந்த் : தெரியுமாடா? அவ அலண்டு போயிட்டா...தம்பி அவ நாம அவளை...(சிரிக்கிறான்) வாஸ்த வந்தான் நெனைச்சா அவ அவளை நாம கொல்லப்போறோம்னு.

உமாகாந்த் : மயிரைப் பிடுங்குபா!... வெட்டி வேலை...

ரமாகாந்த் : எழவு, எலும்பு முறிவுக்கு கட்டுப்போடறவன் மத்தியானந்தான் வந்தான் எல்லாம் கூத்துடா! தம்பி ராவில எலும்பை முறிச்சிட்டு கட்டுப் போடறவனை கண்டுபிடிக்க முடியலே. மத்தியானந்தான் சிக்கினான் அந்த மடையன்.

உமாகாந்த் : முதல் உதவி கொடுக்கப் போனா எப்படி இரைச்சல் போட்டா தேவடியாச் சிறுக்கி!

ரமாகாந்த் : பயந்துட்டாடா! தெரியுமில்லை இது இயற்கைடா!

உமாகாந்த் : தெரியும் சொந்த அண்ணனைப் பார்த்துத்தான் பயப்படுவா! அந்த ஹோண்டூர் பயலை பார்த்தா மட்டும்.

ரமாகாந்த் : இயற்கைடா தம்பி இயற்கைடா!

உமாகாந்த் : இயற்கை! மசிரு!

ரமாகாந்த் : ஆனா காரியம் கச்சிதமா முடிஞ்சு போச்சு. மானிக்குட்டி இனிமே இங்கே அங்கே நகரமுடியாது. கால் உடைஞ்சு போயிடுச்சு! கால்லே மாவிக் கட்டு! வயத்திலே குழந்தை! தம்பி, அந்த ஹோண்டூர் பய நம்ம கிடுக்கிப் பிடியில சரியா மாட்டிக்கிட்டான். குறைச்சல் இருபதாயிரம் நிச்சயமா... எழவு ப்ளாக்மெயில்! உம்யா...

உமாகாந்த் : ப்ளாக்மெயில், மயிரு!

ரமாகாந்த் : பணத்தை வைடா! இல்லாட்டி பேப்பர்ல பச்சையா போட வச்சிடுவேன்! பணம் இல்லியா? அப்ப பேப்பர்தான் கதி!'' அவ்வளவுதான்! தம்பி! அவன் பணத்தை கக்கிடுவான்! உனக்கு பத்து, எனக்குப் பதினைஞ்சு! (உமாகாந்த் அந்த நிலையில் எழுந்திருக்கிறான்) ஏ...ஆல்ரைட், ஆல்ரைட். உனக்கு பன்னண்டரை எனக்கு பன்னிரண்டரை. ஆல்ரைட்! திருப்தி தானே? உனக்கு எப்பவும் எழவு திருப்தியே கிடையாதே.

உமாகாந்த் : மயிரு திருப்தி! பன்னிரண்டரையை கக்கவச்சிடுவேன் ஒன்னை. மானிக்கை தள்ளிவிட்டதே நான்தானே. என்ன வெளையாடுறியா?

ரமாகாந்த் : ஆனா உனக்கு அந்த சான்ஸை குடுத்தது யாருதம்பி? யாரு குடுத்தா? நீ தள்ளிவிடாட்டி நானே தள்ளி விட்டிருப்பேன். சிம்பிள். நான்தான் சான்ஸ் குடுத்தேன். நீதாண்டா உண்மையான தம்பி, ராமனோட லட்சுமணன். மானிக்கை யாரு வழிமறிச்சா? இத பாரு! கையைக் கடிச்சுட்டா தேவடியா...எண்ணிப்பார்க்காம இதையெல்லாம்...

ரமாகாந்த் : எண்ணிப் பார்ப்பேன்டா ரம்யா, விட்டுடுவேனா... தேவடியாப் பையா! விளையாட்டா...பன்னிரண்டாயிருத்து ஐநூற்றையும் எண்ணிப் பார்ப்பேன்.

(டெலிபோன் மணி ஒலிக்கிறது)

ரமாகாந்த் : (உமாகாந்தை கை கோர்த்து ஆடுகிறான்) டிரா ல ல லா... ப்ளாக் மெயில், பணம், பேப்பர் நியூஸ் தயார்... படா தமாஷ்! எழவு ப்ளாக் மெயில்.

டெலிபோன் மணி ஒலிக்கிறது)

உமாகாந்த் : ஃபோன்! மயிரு ஃபோன்! ரம்யா!

ரமாகாந்த் : அடிக்கட்டும்டா அது. தம்பி ''வாசி! நீ புல்லாங்குழலை வாசி'' தமாஷ். சனியன் ப்ளாக்மெயில்! எழவு எல்லாம், கார், பங்களா லேடி செக்கரட்டரி...அடிக்கட்டும்டா அது.

உமாகாந்த் : விளையாட்டில்லை ரம்யா... உன்னைக் கக்க வைச்சிடுவேன்! வெளையாட்டில்லை (ஃபோனைப் பார்த்து) நீ வாயை மூடிக்கிட்டிரு (ஃபோன் மணி ஒலித்துக் கொண்டேயிருக்கிறது)

ரமாகாந்த் : எழவு நிறுத்தாது! கொஞ்சம் பொறுதம்பி! தொலைச்சிடறேன் இதை! (எழுந்திருந்து போர்டின்மீது சாய்ந்து மதுக்கோப்பையை வைத்து விட்டு ரிசீவரை எடுத்து) ஹல்லோ! யூ ராஸ்கல் தேவிடியாப்பையா! எழவு... ராத்திரியில இப்ப என் இந்த இழவு... இப்ப வேணும். அப்புறம் பார்த்துக்கலாம்! போயிடு... போயிடுன்னேன்! போனை வை! போயிடு. இப்ப கிடையாது...இப்ப இல்லேன்னேன். இப்ப இல்லே (கேட்டுக் கொண்டிருக்கிறான். முகம் மாறுகிறது) இல்லே. என்ன? இல்லை (மறுபடியும்) என்ன? எழவு! நெவர் நோ நோ. (கேட்கிறான். முகம் வெள்ளைத்தாளாக வெளிறுகிறது. ஒரு நிலையில் கையிலிருந்து ரிசீவர் வீழ்கிறது. தன்னை நிறுத்திக் கொள்ளத் தவிக்கிறான்) இல்லை. சனியன், எழவு இருக்காது புளுகு.

உமாகாந்த் : உன்னைக் கக்க வைப்பேன் ரம்யா! பன்னிரண்டரை. ஒரு

ரூபாக் குறைஞ்சாகூட ஒப்புத்துக்கமாட்டேண்டா பன்னி! நான்தான்மானிக்கை தள்ளினேன்!

ரமாகாந்த் : இல்லவே இல்லை (முன்னுக்கு வருபவன் நிலைகுலைந்து உமாகாந்த்தின் காலில் நிலைகுலைந்து விழுகிறான்) சுட்டுத்தள்ளுடா ...சுட்டுத் தள்ளுடா இந்த எழவு ஃபோனை.

உமாகாந்த் : (ஸ்டூலிலிருந்து எழுந்து ரமாகாந்த் அருகே அமர்கிறான்) பன்னிரண்டரை! குறையக்கூடாதுடா பன்னி!

ரமாகாந்த் : (உம்யாவின் சட்டைக் காலரைப் பிடித்து உயர்த்தி எழுப்பி) உம்யா! அந்த ஹோண்டூர் பய செத்துட்டாண்டா! எழவு அவன் ஹார்ட் பெயிலாயிருச்சு! ஆமாம், அந்தப் பய குதிகுதின்னு குதிச்சிக்கிட்டிருந்தான்.

ஹோண்டூர் பய செத்துட்டான்! ஆள் குளோஸ்! (எழுந்திருந்து டெலிபோன ருகில் செல்கிறான்) எழவு பிடிச்ச தேவிடியாப்பய! (நம்பாமல் பரிதாபகரமாகப் போனைப் பார்க்கிறான்) ஹோண்டூர் பய போய் சேர்ந்துட்டான்! செத்து தொலைஞ்சிட்டான்.

(உமாகாந்த் முகத்தில் எந்தவித பாவமுமின்றி எழுந்திருந்து போய் ஸ்டூலில் உட்கார்ந்து குடிக்கிறான். ரமாகாந்த் கோப்பையை ஏந்தி சோபாவில் அமர்கிறான்)

ரமாகாந்த் : என்ன எழவு அதிர்ஷ்டம் நமக்கு, தேவிடியாப்பைய! ராஸ்கல், இவிங்களை சுட்டுக் கொளுத்துடா தம்பி! இந்த ராஜாவும் ஒரு தேவிடியாப்பய.

உமாகாந்த் : இல்லே! அவன் தேவி யாப்பையன் இல்லே! அவன் செத்து டான்... ஹார்ட் அட்டாக்... பொக்கு அவன் உயிர் போயிட்டா நாம எ னடா பண்ணமுடியும்?

ரமாகாந்த் : ஏண்டா ஒழிஞ்சான்? அ வும் இப்ப! இன்னிக்கு? சதிடா சனியன்.

உமாகாந்த் : சதி இல்லேடா! அக மாத்தா ஹார்ட் அட்டாக். உயி போச்சு.

எல்லாம் போச்சு... சாவவேண்டி நேரம் வந்திருச்சு.

ரமாகாந்த் : என்கிட்டே சொல்லாதே இது சதி, எல்லாம் கூட்டு சதி... எ லாரும்.

ரமாகாந்த் : எல்லாருந்தான் சேந் செய்யறாங்க! நாம பொறந்ததிலேந் பண்ணிக்கிட்டிருக்காங்க, சதி

ரமாகாந்த் : ஓயாம பாடுபட்ட தே டியா மாதிரி ஓஞ்சு போயிடுச்சடா மன எழவு பன்னி! எழவு பீப்பன்னி!

உமாகாந்த் : நம்ம அப்பன் ஒரு பீ பன்னிடா. (எழுந்திருந்து ரமாகாந் திடம் போகிறான்)

ரமாகாந்த் : தடிப்பன்னி! பெத்தா பாரு!

உமாகாந்த் : அப்புறம் வளர்த்தான்

ரமாகாந்த் : வளர்த்தது ஒரு ஆயாடா அவ ஒரு தேவிடியாச் சிறுக்கி! தெ யுமா. தம்பி! நான் சின்னவனா இரு கறப்ப, விளையாடப் போன்னு சொ லிட்டு இவ வாட்ச்மேனோட, என் செய்வா தெரியுமா? எழவு திருட்டு

தேவிடியா! அவ பாலைக் குடிச்சு வளர்ந்தவன் நான்! எல்லாரும் தேவிடியாப்பசங்க. எல்லாரையும் சுட்டுப் பொசுக்கிடறேன்.

ரமாகாந்த் : உனக்கு கல்யாணம் பண்ணி வச்சாரு!

உமாகாந்த் : வாயை மூடுடா அப்பா உனக்குத்தாண்டா கல்யாணம் பண்ணி வச்சாரு! நமக்கு என்ன விட்டுவச்சாரு (சிரிக்கிறான்) என்ன விட்டுவச்சார் நமக்கு!

ரமாகாந்த் : பயப்படாதேடா தம்பி! உனக்கும் கல்யாணம் பண்ணி வச்சிடறோம், ஒரு கொட்டைப் பாக்கைப் பார்த்து.

உமாகாந்த் : அப்புறம் எனக்கு குழந்தைங்க பொறக்கும். கொட்டைப்பாக்கு குழந்தைங்க.

(இடி இடியென்று சிரிக்கிறார்கள்)

ரமாகாந்த்: உனக்குப் பொறக்குண்டா! உனக்கும் பொறக்கும். எனக்கும் பொறக்கும். (நெஞ்சைகாட்டி) இங்கேயிருந்து சொல்றேன். பொறக்கும் புள்ளை. பையன் குட்டிப் பையன்.

உமாகாந்த் : (அமர்ந்து) உனக்கு பொறக்கும் கழுதை. காதோட, மூணு காலுங்களோட, (இரைந்து சிரிக்கிறான்) செத்துப் பொறக்கும்.

ரமாகாந்த் : (கையிலிருக்கும் கோப்பையை அடித்து நொறுக்கி) நோ.

(திடீரென்று அமைதி. ரமாகாந்த் முகத்தை மறைத்துக் கொள்கிறான். பிறகு கைகளை நீக்குகிறான். எழுந்திருந்து கோப்பைகளை நிரப்புகிறான்)

தம்பி! குட்டிமானிக் இருக்காளா, செத்துட்டாளா?

உமாகாந்த் : குட்டிமானிக் உடன் கட்டை ஏறிட்டா ஹோண்டூர் ராஜாவோட.

ரமாகாந்த் : அம்மாடி! உடைஞ்ச காலை வைச்சுக்கிட்டு எப்படி உடன் கட்டை ஏறினா? சிதை நெருப்பு மேல ஏறி உக்கார முடிஞ்சுதா?

உமாகாந்த் : குழந்தை மேல உட்கார்ந்திருப்பா! வயத்தில இருக்கே ஒண்ணு.

ரமாகாந்த் : த்லை கிறுகிறுக்குதடா! பர்ஸ்ட் கிளாஸ் சீன்! கூட்டம் அலை மோதும் 108-வது வாரம்! நம்ம மானிக்குட்டி வயத்துக் குழந்தை மேல குந்திக்கிட்டு உடன்கட்டை ஏறினா எழவு ஆகாயம் வரை தீ கொழுந்து விட்டு எரியும்!

உமாகாந்த் : ஒசந்த இடத்தில உக்காந்துக்கிட்டு இதை நோட்டம் விடு! பறக்கற பறவை மாதிரி! (சிரிக்கிறான்) இந்தா இன்னு கொஞ்சம்.

ரமாகாந்த் : டெக்னிக் கலர்! டிக்கட் விப்பம்டா! சனியன் பணத்தை சம்பாதிப்போம்! நம்மகடனை அடைப்போம்! தம்பி, வீடு, காரு எழவு நவநாகரிகமா...

உமாகாந்த் : ஆனா உனக்கு குழந்தை மட்டும் பொறக்காது.

ரமாகாந்த் : மூடுடா வாயை! கொன்னைப்பயலே! பன்னிக்குப் பொறந்த பயலே! எழவு பிடிச்ச தேவிடியாப் பயலே! சுட்டுக் கொன்னுடறேன் உன்னை.

உமாகாந்த் : (கையைக் குலுக்கி) சுடறியா நீ. மயிரு இந்த தேவடியாப் பய என்னைச் சுடப்போறானாம். இன்னும் கொஞ்சம் குடி.

ரமாகாந்த் : எல்லாரும் தேவடியாப் பயங்க! கடைஞ்செடுத்த தேவிடியாப் பயங்க!

உமாகாந்த் : (கையால் ஜாடை காட்டி குடிபோதையில்) மானிக்கோட ராஜா செத்துட்டான். கதை முடிஞ்சுபோச்சு.

ரமாகாந்த் : எழவு தேவிடியாப்பய!

உமாகாந்த் : தேவிடியாப்பய! காலியாயிட்டான்.

ரமாகாந்த் : தம்பி, ஒரு நிமிஷம் இங்கே வா.

உமாகாந்த் : நீ இங்கே வாயேன்.

ரமாகாந்த் : இங்கே வாடா. எழவு சொல்றேன் இல்லே. (உமாகாந்த் குனிந்து நிற்கிறான்) இங்கே வா (உமாகாந்த் முனகுகிறான்) ராஜா உயிரோட இருக்கான் மானிக் வயத்தில! திருட்டுத் தேவிடியாப்பய! எழவு எதிரி! துரோகி! தம்பி கொன்னுடறேன் அவனை!

உமாகாந்த் : சுடறியா! மயிரு!

ரமாகாந்த் : தமாஷ் இல்லேடா தம்பி! அவன் எழவு நம்ம எதிரிடா! எழவு எதிரி! எழவு தேவிடியாப்பய!

உமாகாந்த் : (நெருங்கி வந்து) தூக்கி எறிவோம், மானிக் வயத்தில இருக்கற ராஜாவை. ஒரே ஒரு உதை—போறும்.

ரமாகாந்த் : ஒரு ஐடியாடா! கலைச்சிடுவோம்? தூக்கி எறிஞ்சிடுவோம்! தேவிடியா பரம்பரை! சனியன்! வாடா தம்பி! ராஜாவோட வாரிசைக் காலி பண்ணிடுவோம்! முதல்லே வா. குட்டி மானிக் கத்திக்கிட்டே—இருக்கட்டும். குழந்தை வெளியில எகிர்ற வரை சனியன் கத்துவா! எழவு கலகந்தான்! தூக்கி எறி அதை! மானிக் ராஜாவை வயத்தில வச்சுக்கிட்டு அலையறா... வாடா...

(இருவரும் கிளம்புகின்றனர்)

சனியன் புடுச்ச பசங்க! காட்டிக்கொடுக்கற ஜாதிங்க. தூக்கி கடாசிடுவோம்! காலி பண்ணிடுவோம்!

ரமாகாந்த் ; (கட்டாயமாக அவனை நிறுத்தி) நிறுத்துடா! (குடிக்கிறான்) நான் புட்பால் வெளையாட போன தலை. நீ உதைச்சு வெளியில தள்ளு. (சிரிக்கிறான்)

(வெளியேறுகின்றனர், மானிக்கைத் திட்டியபடி பதற்றத்துடன் வெளியேற்றம். கதவு தட்டும் ஒலி. கதவை உதைத்து ''மானிக், கதவைத்திற. கதவைத்திற'' நிலைமை உச்சக்கட்டத்தை அடைகிறது. பிறகு ஒரு நொடி மானிக்கின் அலறல் ஒலி. அடுத்த நொடியில் மானிக் அலறியபடி மாடிப் படியில் தவழ்ந்து வருகிறாள். ஒரு காலில் பிளாஸ்டர். வெள்ளைப்புடவை முழுக்க ரத்தம். அடிவயிற்றை ஒரு கையில் பிடித்துக் கொண்டு, வலியில் துடித்தபடி திரும்பிப் பார்த்தபடி, முன் வாசல் வழியாக வெளியேறுகிறாள். நடை வழியாக அவள் செல்வது தெரிகிறது. வழி நடையின் ஒரு கோடியில் அப்பா நின்று சிரித்துக் கொண்டிருக்கிறார்.)

## காட்சி-4

ஒளி பரவுகிறது. பெட்ரூம். ரமா படுக்கையில் சாய்ந்து கொண்டிருக்கிறாள். வரவேற்பு அறையில் ரமாகாந்த், அவையோருக்கு முதுகைக் காட்டியபடி ஒரு நிமிடம். அங்கு நிற்பவன் மாடிப்படிகளில் ஏறி வந்து ரமாவிடம் வந்து அமர்கிறான். வரவேற்பு அறையில் மூன்று பேர். காக்கி உடையில் இருவர் சோபாவை எடுத்துக் கொண்டு வெளியேறுகின்றனர் மூன்றாவது ஆள் டெலிபோன், ரெகார்டு பிரேயரை எடுக்கிறான். இவை நடக்கும்பொழுது ரமாகாந்த் சிறிய பாட்டிலிலிருந்து மாத்திரையை எடுத்து ரமாவிடம் கொடுக்கிறான். ரமா அதை வாங்கிக் கொள்கிறாள். ரமாகாந்த் தண்ணீரைக் கொடுக்க ரமா மாத்திரையை விழுங்குகிறாள். அவன் முகத்தில் பேரார்வம். சிறிது நேரம் கழித்து எழுந்திருக்கிறான். ரமா படுத்துக் கொண்டிருப்பவள் எழுந்திருந்து, அவனைப் பிடித்தவாறு பேசுகிறாள்.

ரமா : என்னைவிட்டுப் போயிடாதீங்க. எனக்கு பயமாயிருக்கு.

ரமாகாந்த் : முழுமுட்டாள் நீ. பைத்தியம். என்ன பயம் உனக்கு? உம்... பயப்பட என்ன இருக்கு? நீ தூங்க வேண்டியதுதானே! இல்லாட்டி சந்தோஷமா எதையாவது நெனச்சுக்கிட்டு...உன் உடம்பில இப்ப ரெண்டு ஜீவன்கள் இருக்கு. இல்லே? நீ ஜாக்கிரதையா இருக்கணும், இன்னும் கொஞ்சநாள்தானே.

ரமா : தூக்கம் வரமாட்டேங்குது. துளி கூட தூங்கமுடியலே. கண்ணை மூடினா பயங்கரமான விஷயங்கள்ளாம் கண்ணுக்கு முன்னால வருது.

ரமாகாந்த் : எல்லாம் பிரமை.

ரமா : என்னென்னவோ தெரியுது! ஏதேதோ சப்தம்லாம் கேக்குது... உடம்பே நடுங்குது...

ரமாகாந்த் : நீ எப்பவுமே பயந்த பொம்பளை. அப்படி என்னத்தை பார்க்கறே? இல வ ச சினிமான்னு நெனச்சுக்க. அப்புறம் மறந்துபோயிடு. சரி என்ன தெரியுது?

ரமா : தெரியுது (எழுந்திருக்க முயற்சிக்கிறாள்) அதுங்க என் குழந்தையை எடுத்துக்கிட்டுப் போவுது.

ரமாகாந்த் : (உட்காரவைத்து) வாயை மூடு, முட்டாள். ஜோசியர் கார்வே என்ன சொல்லியிருக்காரு. அப்புறம் அந்த ஷீரடி விபூதி கொண்டுவந்து கொடுத்தேனே. தெனம் மருந்து மாத்திரை ஏழு ரூபா. இன்ஜெக்ஷன் பத்து ரூபா. ஒரு நாளைக்கு, இதுக்கு மேலே ஒரு மனுஷன் என்ன செய்ய முடியும்?

ரமா : என்னைவிட்டு எங்கேயும் போகாதீங்க.

ரமாகாந்த் : ரொம்ப நல்லாயிருக்கு. இங்கேயே நான் உக்காந்துக்கிட்டிருந்தா யாரு பிசினஸ்சை பார்த்துப்பாங்க.

ரமா : இந்த வீடு என்னை விழுங்கிக்கிட்டிருக்கு. இந்த ரூம்...இந்த ஜன்னல் வழியா—இந்த ஜன்னல்...அவங்க தெரியறாங்க...அந்த ரெண்டு பேரும்.

ரமாகாந்த் : எந்த ரெண்டு பேரும்? யாருரெண்டு பேர்?

ரமா : மாமாவும் என் நாத்தனாரும்... இங்கேயே பார்த்துக்கிட்டிருக்காங்க... கண் நெருப்புக்கங்கா எரிஞ்சுக்கிட்டிருக்கு.

ரமாகாந்த் : இதான் தெரியுதா? இன்னும் வேற ஏதாவது தெரியுதா? எழவு தெரியுதாம். பார்த்திட்டு பயப்படறாளாம். அவங்க பார்த்தா என்ன? எழவு கோழைங்க. கோட்டானுங்க. இங்க காலடி எடுத்துவைக்க எவனுக்கு தில் இருக்கு? சுட்டுப்பொசுக்கிடுவேன்.

ரமா : எப்பவும் நெஞ்சில ஒரு கனம் அடைக்குது. என் லைப்ஃ இதோட...

ரமாகாந்த் : நிச்சயம் நீ போயிட மாட்டே! நாலுமாசம் விருட்டுனு ஓடிப் போயிடும்! கொஞ்சநாள்தான் அப்புறம் என்ன? என் மஹாராணி சந்தோஷத்தில மிதப்பா, குட்டி இளவரசனோட விளையாடிக்கிட்டு. அப்புறம் நேரம் போறதே தெரியாது.எழவு புருஷனைக் கூட கவனிக்க தோணாது! குழந்தை! குழந்தை! குழந்தை. எல்லாம் குழந்தைதான்.

ரம்யா : நான் அம்மா ஆகப்போறேன்! நிச்சயமா நான் அம்மா ஆயிடுவேன் இல்லே?

ரமாகாந்த் : இப்படிக் கேட்டா என்ன அர்த்தம்? மிட் வைப்ஃ, நர்ஸ், தொட்டில் எல்லாம் வரப்போவுது! இதெல்லாம் எனக்கா? புதுசா தொட்டில் ஒண்ணு வாங்கப்போனேன். நீ பழசே போறும்னு சொன்னே! இந்த வீட்டுக் குழந்தைகள்ளாம் விளயாடின தொட்டில். அதனால அதையே எடுத்து ரிப்பேர் பண்ணி பெயிண்ட் அடிச்சு வச்சிருக்கேன். நாங்கள்ளாம் அதில தான் கிடந்து வளர்ந்தோம்.

ரமா : நான் அம்மா ஆகப் போறேன் (சிரிக்கத் துவங்குகிறாள், ஹிஸ்டீரியாத் தனமாக)

ரமாகாந்த் : போறும் போறும் சிரிச்சது நிறுத்து, இப்ப ரொம்ப சிரிக்கக்கூடாது பிரக்னெண்ட்டா இருக்கறப்ப ஒருத்தர் ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். அஞ்சாம் மாசம் ஒரு கெட்ட பாவி!

ரமா : (பயந்த குரலில்) ரொபம்ப கெட்டதா?

ரமாகாந்த் : கெட்டதுன்னா ரொம்பக் கெட்டதில்லே. இருந்தாலும் உன்னை நீ பார்த்துக்கணும். அமைதியா படுத்துக்கிடயேன். நெறய ரெஸ்ட் எடுத்துக்க என்ன? என்னை எழவு யாரும் ரெஸ்ட் எடுத்துக்கன்னு சொல்றதில்லே. உன்னை எடுத்துக்கன்னா, உக்காந்துக்கிட்டு கரையறே. ஆவிகள் எரியுதாம்! மூச்சுவிட முடியலியாம்.

ரமா : இனிமே நான் அழவே மாட்டேன்.

ரமாகாந்த் :இப்பதான் நல்லபொண்ணு (எழுந்திருந்து) நான் வரட்டுமா அப்ப?

ரமா : நான் ஒண்ணு கேக்கட்டுமா?

ரமாகாந்த்: (பொறுமையிழந்து) என்ன கேக்கப்போறே?

ரமா : உங்களைப் பார்க்க வந்திருந்தாங்களே கீழ் ரூம்லே அவங்க யாரு இப்ப வந்தாங்களே...

(திடீரென்று எழுந்திருக்கிறான் அவன்) குரல் கேட்டுச்சு. ஆள்கள் தெரிஞ்சாங்க. கத்திக் கிட்டிருந்தாங்க. நீங்களும் இரைஞ்சு சத்தம் போட்டுக்கிட்டிருந் தீங்க. என்னவோ நடக்கப் போவு துன்னு நெனச்சேன். எழுந்திருந்தேன். கீழ் ரூமை பார்த்தேன். ஆனா நீங்க என்னை ரூம்ல வச்சு வெளியில பூட்டி னீங்க. (அவன் ஊமையாகிறான்) யாரு அவங்க? என்ன சொன்னாங்க? என்ன வேணும் அவங்களுக்கு? உங் களை கண்டபடி திட்டிக்கிட்டிருந்தாங்க.

ரமாகாந்த் : (சற்று முயற்சி செய்து) நீங்க பொம்பளைங்க பைசா பொறாத ஆயிரம் கேள்வி கேட்டிடுவீங்க. ஆம்ப ளைங்களை ஒரு காரியம் பண்ணவிட மாட்டீங்க. சின்னதா ஏதாவது நடந்தா கூட உங்க மூக்கு வேர்க்குது. என்ன இழவு இது? என்னது இது? (திரும்பி முகத்தைத் திருப்பிக் கொள்கிறான் அவன்) வேற ஒண்ணுமில்லே... நெறய சிக்கல்கள் பிசினஸ்ல...

ரமா : ஆனா ஏன் வீட்லே...?

ரமாகாந்த் : நான் என்ன பண்றது? ஆபிஸ்ல முக்கியமான விஷயங்கள் பேசத்தான் டயமிருக்கு. ஆபிஸ்ல ஆள்கள் வரப்போக, எப்பவும் போன்கா லுங்க... வெளிவேலை... கன்ஸ்ட்ரக்ஷன் சைட்டைப் போய் பார்க்கணும்... நமக்கு கஷ்டகாலம் வந்திடுச்சு.

ரமா : அப்ப ஏன் இன்னிக்கு நீங்க ஆபிசுக்குப் போகல்லே.

ரமாகாந்த : (துடிதுடித்து) சனியன்! கொஞ்ச நாள்லே ஒஞ்சி போயிடறோம். பிசினஸ், எழவு எல்லாம் துரதிர்ஷ்டம். வேலையாட்களை வச்சுக்கிட்டு மார டிச்சு மண்டை முடிலாம் கொட்டுது!

ரமா: சரி, நம்மளால பண்ணமுடியலே அப்ப...

ரமாகாந்த் : அப்ப நான் என்னதான் செய்ய முடியும்?

ரமா : (மனக் கவலையுடன்) ஏதாவது ஒரு வேலை தேடிக்குங்க... கிடைக்கிற வேலைக்கு சம்பளம் கம்மி யாயிருந்தாலும் பரவாயில்லை... வாழ வேண்டிவந்தா வறுமையிலியும் வாழ் வோம். பருக்கை சாதத்தைக்கூட பாயசச் சாப்பாடா நெனச்சுப்போம். தாங்க வேண்டியதை தாங்கிப்போம்... உங்களுக்கு அடிமையாயிருந்து கஷ்டப் படத் தயார் நான்... சந்தோஷமா... இப்படி சிறைப்பட்டு சாகறதுபோதும். இந்த பயங்கர நாடகம் பளிச்சினு முடி யட்டும்... கொலைப்பாதகத்தனம், ஏமாற்று வேலையை நிறுத்துங்க... நேர்மையா எல்லாத்துக்கும் முடிவு கட்டுங்க... அழுக்குப்பிடிச்சு வாட்டுற இந்த வீட்டைவிட்டுப் போயிடுவோம். தூர எங்கேயோ. இங்கே யாருமே சந்தோஷமா காலந்தள்ள முடியாது. முடியவே முடியாது. நான் சொல்றதை கேட்பீங்களா? ஒரே ஒரு தரம். இனிமே நான் உங்களை எதையுமே செய்யச் சொல்ல மாட்டேன். எதுவும். இப்படி இருக்கற மாதிரியே இருந்திடுவோம் வாய்மூடி, தலை குனிஞ்சு...

(அவன் முகத்தில் ஒரு மாறுதலைக் காண்கிறாள் அவள். பயத்தில் அமைதி யாகிறாள். கேட்பவன் முகத்தைச் சுருக்குகிறான். தகர்ந்து போகிறான். பின்பு இறுகுகிறான். அவள் அமைதி

யாகும் பொழுது தன் பலத்தை ஒன்று சேர்த்து எழுந்து நிற்கிறாள்.)

ரமாகாந்த் : இதபாரு ரமா! இந்த வீட்ல பொம்பளைங்க புத்தி சொல்லி அதை ஆம்பளைங்க கேட்டு பழக்க மில்லை. இந்த வீட்ல எந்த காலத்தி லியும் பொண்டாட்டிதாசன்க இருந்த தில்லை. எனக்கு நல்லாவே தெரியும் எதைச் செய்யணும், எதைச் செய்யக் கூடாதுன்னு.ஒரு பொம்பளை ஒண்ணும் புத்தி புகட்டவேண்டாம். நான் போலா மில்லே? நல்லா ரெஸ்ட் எடுத்துக்க மடத்தனமா எதையாவது கற்பனை பண்ணிக்கிட்டிருக்காதே. உன் புருஷன் உயிரோடதான் இருக்கான். உனக்கு தெரியுமில்லே? (வாத்சல்யத்தோடு அவளைப் படுக்கையில்இருத்துகிறான்) காலை சாயந்தரம் நெறய பாலைக் குடி. பழம்கூட ரொம்ப நல்லது பழக் காரன் கிட்டே சொல்லியிருக்கேன். O.K.? நான் வரேன். ஒரு அப்பா-யிண்ட்மெண்ட் இருக்கு. அவன் பேரென்ன?

(மாடிப்படிகளில் இறங்கிப்போகிறான். ஒரு பாட்டிலை எடுக்கிறான் பாக்கெட் டிலிருந்து.அவள் தலையணையில்முகம் புதைத்து விம்முகிறாள்)

காட்சி — 6

ஒளி பரவுகிறது. அதே இடம். ரமா காந்த் நிறையக் குடித்துவிட்டு தூங்கிப் போய்விட்டான் ஒரு ஈஸிசேரில். பாட்டி லும் கோப்பையும் அருகில். அவன் மீது ஸ்பாட்லைட்.

ரமாகாந்த்தின் குரல்: (ஒலிப்பதிவு செய்யப்பட்டது)ரமா நான் சொல்றேன் நம்ம குழந்தை நமக்கு அதிர்ஷ்டத்தை கொண்டுவரும். இனிமே கஷ்டமே இல்லை, என்ன? இப்போ ஒரு டீல் நடந்துக்கிட்டிருக்கு. முடிவாச்சு, அப் புறம் உனக்கென்ன தெரியும்? எழவு கார் டிரைவர்...எழவு வீட்டைப் புதுசு பண்ணிடலாம்.. நிச்சயம்..செஞ்சிடலாம் புதுசா ஃப்ளோரிங் போட்டு...எழவு வீட்டை ஜோரா பண்ணிடலாம். அப் புறம்...சமையல்காரன், வாட்ச்மேன்... கேட்ல. பத்து பன்னிரண்டு வேலைக் காரன்க உன் கீழே. ரேடியோ கிளப் பில தெனைக்கும் டின்னர்!

கவலைப்படாதே ரமா! எல்லாம் நடக் கும். குழந்தையை மூவுள கான்வென்ட் டில போட்டிடலாம். என்ன? அங்கே யிருந்து ராஜகுமாரனை எழவு டெல்லி காலேஜிக்கு அனுப்பிச்சிடலாம்.ஆமாம்! அப்புறம்...அப்புறம் ஆசைப்பட்டா ஆக்ஸ்போர்டு... இந்தியாவில பேர் போன கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனிக்கு எம். டி.யா வந்திடுவான்! வெறும் தமாஷ் இல்லை எல்லாம் அப்-டு-டேட்டா இருக்கும். கவலைப்படாதே... ரமா... ரெஸ்ட் எடுத்துக்க.பழம் ரொம்ப நல்லது. பால்தான் குடிக்கணும். காலை சாயந்தரம். எழவு உடம்புக்கு நல்லது. (மெல்ல மெல்ல ஒலி தேய் கிறது. பைப் புகைத்தபடி உமாகாந்த் ரமாகாந்த் அருகே நிற்கிறான். இந்த நிலையில் முதன்முதலாக இப்பொழுது தான் அவனைப் பார்க்கிறோம். அமைதியாக அவன் உட்கார்கிறான். ரமாகாந்த்தைப் பார்க்கிறான்.பைப்பை புகைக்கிறான். ரமாகாந்த் இதை அறி யாது மயங்கியிருக்கிறான். திடீரென்று

விழித்தெழுந்து உமாகாந்த்தை ஒரு கனவு காண்பதுபோல் பார்க்கிறான்.)

ரமாகாந்த் : (தன்னிலை பெற்று) ஹலோ...

உமாகாந்த்: ஃபோன் ஏன் போயிடுச்சு? (ரமாகாந்த்திற்கு கேள்வி புரிவதில்லை. சுயநினைவு பெற்றும் அவனுக்கு இது மனதில் பதிவாகவே இல்லை.

ரமாகாந்த் : கொஞ்சம் தூங்கலாம்னு தோணுது.

உமாகாந்த் : சோபா எப்ப திரும்பி வரும், சிப்பேராயி ?

ரமாகாந்த் : சோபா... இந்த சோபா... (கேள்விகள் அவனைத் தன்னுணர்வு அடையச் செய்யவில்லை)

உமாகாந்த் : கல்யாணத்துக்கு இரவல் கொடுத்தியே ரேடியோகிராம்? ஏன் திருப்பி வாங்கலே? (ரமாகாந்த் பரிதாப கரமாக தன் நிலை அடைய முயற்சிக் கிறான்)

ஏன்? இன்னிக்கு ஏதாவது புது சரக்கு வச்சிருக்கியா?

ரமாகாந்த் : புதுசா... இல்லை தம்பி... இது என் விவகாரம்... என்னோட சொந்த விவகாரம்—

உமாகாந்த் : அம்மாவோட நகைகள் ளாம் எங்கே? இல்லாட்டி இதுவும் உன் சொந்த விவகாரமா?

ரமாகாந்த் : பேங்கில இருக்கு. லாக் கர்ல. எழவு வீட்ல வச்சிருந்தா ஆபத்து. அதைக் கட்டிக் காப்பாத்தறது யாரு?

உமாகாந்த் : லாக்கர்ல வச்சிருக்கியா? என் அனுமதியில்லாம? இது உங்கப்பன் எஸ்டேட்டா? நம்ப ரெண்டுபேருக்கும் இதில பங்கு உண்டு.

ரமாகாந்த் : உனக்குப் பங்கில்லேன்னு யாரு சொன்னா?

உமாகாந்த் : மானிக்கோட பணத்தில பங்குண்டுல்லே? எனக்கு எப்ப கிடைக் கும் அது?

ரமாகாந்த் : சரி, அதைக் குடுத்திட ரேண்டா! அதுக்கு ஏண்டா இப்படி கூத்துக்கூத்தா ஆடறே?

உமாகாந்த் : யாரு கூத்துக்கூத்தா ஆடறாங்க? அப்பாவுக்கு தனிக்கணக் கில இருந்த அமௌண்டு? மானிக் கோட பங்கில பிப்டி-பிப்டி பிரிக்கணும். தெரியுமில்லே?

ரமாகாந்த் : (நாடகமேடை பாணியில் சிரித்து, ஓய்ந்து, பிறகு எழுந்திருந்து) தம்பி, என்னடா எழவு என்னிக்கு இருப்பு கணக்கு பார்க்கற நாளா உனக்கு? எழவு, பெரிய பட்டியலே படிக்கறே.

உமாகாந்த் : என்னை ஏமாத்த பார்க்க வேணாம்! உன்னை இத்தினியூண்டி லேந்து எனக்கு தெரியும்? ஆபீஸ் கையைவிட்டு போயிடுச்சு. நெஜமா? இல்லையா?

ரமாகாந்த் : போயிருக்கலாம். உனக் கும் அதுக்கும் எழவு என்ன சம்பந்தம்?

உமாகாந்த் : வீட்டை ரெட்டை அட மானம் வச்சிருக்கியாமே... நெஜமா? இல்லையா?

ரமாகாந்த் : (முகத்தைக் கடுகடுத்து) இதெல்லாம் ஒங்கிட்டே சொல்லிக்கிட் டிருக்க தேவையில்லை.

உமாகாந்த்: சொல்லிக்கிட்டிருக்க என்ன இருக்கு? மடசாம்பிராணி. எல்லாம் முடிஞ்சு போச்சு. இன்னும் ரெண்டு நாள்கூட தாங்கமாட்டே நீ.

ரமாகாந்த் : (அதிர்வடைந்து) எழவு உனக்கு அதெல்லாம் பத்தி என்ன தெரியும்? பெரிய விசிரா பண்றே...

உமாகாந்த் : உனக்கு என்ன தெரியும்னு எனக்கு தெரியும். ஒன் மரமண்டையில ஒண்ணும் ஏறாது, அதையெல்லாம் நான் சொல்ல ஆரம்பிச்சா இப்பவே விஷத்தை முழுங்கிட்டு சுருண்டு போயிடுவே.

ரமாகாந்த் : வெஷமா? வெளையாட்டுன்னு நெனைக்கறியா? (உமாகாந்த் காலரைப் பிடிக்கிறான். உமாகாந்த் சிலிர்த்து விடுபடுகிறான்) வெளியில போடா! எழவு பூச்சி காட்றான்! தேவடியாப்பையா! ரத்தத்தை உறிஞ்சற அட்டைப்பயலே! என் விவகாரத்தை சமாளிக்க எனக்குத் தெரியும்!

உமாகாந்த் : கவனிக்க என்ன வச்சிருக்கே! வீடு ரெட்டை அடமானத்தில இருக்கு! ஆபிஸ் போயிடுச்சு. பாங்க் அக்கவுண்டுக்கு அட்டாச்மெண்ட் வந்திடும். எனக்குன்னு என்ன இருக்கு. ஒண்ணுக்கும் உதவாத ஆள் இனிமே என்ன கவனிக்க இருக்கு! எழவு விடியா மூஞ்சி!

ரமாகாந்த் : (அருகில் உள்ளே ஸ்டூலில் அமர்ந்து) அப்ப என்ன உபதேசம் பண்றே பிரதர். நீ என்ன எழவு சொல்றியோ செய்யறேன் நான்.

உமாகாந்த் : உனக்கு நல்ல காலம் வந்திடுச்சு. சரி, இப்ப எவன் உன்னை எப்படி போட்டு இழுக்கறான்னு பார்ப்போம் நேரம் பறந்துக்கிட்டிருக்கு. கடன்காரன்க என்னைத் தேடிக்கிட்டிருக்காங்க...பாங்குக்கும் நியூஸ் போயிருக்கும். செக்கெல்லாம் திரும்பிவரப் போவுது.

ரமாகாந்த் : (முகத்தை மூடிக்கொண்டு) பிரதர், நீதான் ஏதாவது வழி சொல்லணும். ஏதாவது செய்டா. என்ன எழவு தம்பிடா நீ.

உமாகாந்த் : (பைப்பை இழுத்துவிட்டுப் புகைத்து) லாபம்லாம் எங்கே வச்சிருக்கே?

ரமாகாந்த் : லாபமா? தம்பி நீயும் நானும் ஒண்ணுடா! என் எழவு லாபம் உன் லாபம்.

உமாகாந்த் : வீட்டை என் பேருக்கு எழுதிக் கொடு. நான் மீட்டுக்கறேன்.

ரமாகாந்த் : (இரைகிறான்) பிரதர் இந்த எழவு வீடு என்பங்கு.

உமாகாந்த் : உன் பங்கு மூல்தானியோட கடனை அடைக்க சரியாயிருக்கும். இந்த வீட்டை என் பேருக்கு மாத்த உன்னால முடியுமா, முடியாதா? சொல்லு.

ரமாகாந்த் : எல்லாமே போயிடுச்சு. நீ ஏன் இந்த எழவு வீட்டைப் பத்தியே பேசிக்கிட்டிருக்கே.

உமாகாந்த் : எல்லாமே போனாலும் என்ன? எனக்கொண்ணும் குடிமுழுகிப் போகல்லே. எனக்கு வீடு வேணும்.

ரமாகாந்த் : ஆனா தம்பி, இதுவாழ்வா சாவாங்கிற பிரச்சினை. நான் குடும் பஸ்தன். பொண்டாட்டி, குழந்தை...

உமாகாந்த் : போய் சாவு. எனக்கு இந்த வீடு வேணும்.

(ரமாகாந்த் துயரத்தோடு எழுந்திருக் கிறான். அலமாரியிலிருந்து எடுத்து குடிக்கிறான்)

ரமாகாந்த் : (கண்டிப்பான குரலில்) நான் உன்கிட்டே ஒண்ணு சொல்லியே தீரணும். நல்லவேளை, சரியான நேரத்தில ஞாபகம் வந்திச்சு. எழவு சொல்லணும்னு நெனைப்பேன். எங்கே நேரம் இருந்திச்சு. நான் கஷ்டத்தில இருக்கேன் தம்பி. என் எழவு துரதிர்ஷ் டம் என் கழுத்தைப் போட்டு நெருக் குது. ரட்சிப்பவன் இல்லை. எங்கே போய் முறையிடுவேன்? கடவுள் அவர் தன்னோட சொர்க்கத்திலே தேவலோக அழகிகளோட இதோட (குடிக்கிறான். அதைக் காண்பிக்கிறான்) எழவு அவருக்கு என்னை கவனிக்க நேர மில்லை. சொப்ப பிசி. ஒருத்தன் கீழே விழுந்திட்டா அப்புறம் அவனை சீண்ட ஆள் கிடையாது. என் துரதிர்ஷ்டம் பத்தி நீ ஏன் கவலைப்படறே? உனக்கு நல்ல நேரம். பணம் பண்ணிக்கிட்டி ருக்கே. இன்னும் பண்ணுவே. எழவு பணம் மழையா பொழியும். கூடிய சீக்கிரம் கல்யாணமும் பண்ணிப்பே. அஞ்சு பத்து குழந்தையும் பொறக்கும். பணம் பத்தும் பண்ணும். நீ கொழிச்சிக் கிட்டிருக்கே. அதுக்காக என் குரல் வளையை ஏன் நெருக்கணும்? நீ எங்கே வேணுமானாலும் போ. பங்களா வாங் கிக்க. கார், சமையல்காரன் டிரைவர் எழவு வேலைக்காரங்க வச்சுக்க, யார் கேக்கப்போறாங்க. நாங்களங்க ஆசிரம குடிசையில இருந்துக்கறோம். எழவு எப்படியோ காலந்தள்ளிக்கறோம். இல்லாட்டி எங்கேயோ போறோம், என்ன? கூலி வேலைக்குப் போறோம். கெடைக்காட்டி பிச்சை எடுக்கறோம். அதைப்பத்தி ஒனக்கென்ன கவலை. அப்ப நீ என் எழவு தம்பியா இருந்தாத் தான் என்ன. இல்லாட்டித்தான் என்ன? சரி தம்பி, குட்பை. இந்த சகதியிலேந்து சீக்கிரம் கையை எடுத்துக்க. இன் னிக்கோ நாளைக்கோ, நல்லபடியா இரு.

உமாகாந்த் (எல்லாவற்றையும் கேட்டு பிரமித்து) அப்ப எதையும் யோஜனை செய்ய நீ தயாராயில்லே.

ரமாகாந்த் : எழவு எப்படி நான் யோஜிக்க முடியும்? அதுக்கு மூளை தான் இருக்கா, அறிவுதான் இருக்கா. மடையன் நான். நீ எழவு கெட்டிக் காரன் புத்திசாலி. நீ யோசி, வெளியில போறது பத்தி. நீ எப்ப போவே?

உமாகாந்த் : நீ வருத்தப்படப்போறே பின்னால...

ரமாகாந்த் : அதைப் பார்க்க நீ இங்க இருக்கப் போறதில்லை.

உமாகாந்த் : (சிதைந்து) முதல்லே கணக்கை தீரு. அப்புறம் நான் நகர் றேன். அப்பா பதுக்கி வச்ச சொத்து, மானிக்கோட பணம், அம்மாவோட நகைங்க.

ரமாகாந்த் : வெளியே போய் நின்னு கேளு. அப்ப கிடைக்கும். வெளியில கிளம்பிட்ட. போயிடு.

உமாகாந்த் : (அடக்க முடியாத ஆத்தி ரத்தில் ரமாகாந்த் கழுத்தைக் கைப் பற்றி) நிறுத்துடா. நான் ஒத்தப்பைசா வரை கணக்கு தீர்த்தாதான் கிளம்பு வேன். தேவிடியாப்பையா! நீ எடுத்துக் கிட்டுப் போக விட்டுடுவேனா? உன் கழுத்துமேல ''உக்காருவேன் உன்னை கக்க வைப்பேன்!'' எழவு பிடிச்ச மிருகமே! மோசக்கார நாயே! சாக்கடையில பிடிச்சு உன்னை அமுக்கறேன் பாரு!

ரமாகாந்த் : (கழுத்தை விடுவித்துக் கொண்டு) கத்தாதேப்பா. ரமாவுக்கு தொந்தரவாயிருக்கும்பா. புள்ளை தாச்சிக்காரி...

உமாகாந்த் : உன் பொண்டாட்டி வயத்தில சுமந்துக்கிட்டிருக்கிற குழந்தை பத்தி தெரியும்பா! புதுசா இப்பதான் பொறக்குதா குழந்தை உலகத்தில! நீ நல்ல ஆம்பிளையானா முன்னால ஏன் அபார்ஷன் ஆயிக் கிட்டே இருந்தது? ரெண்டு மாசத்தில, நாலு மாசத்தில! இந்த குழந்தை உன் னோடதுதான்னு எப்படி சொல்றே நீ?

ரமாகாந்த் : (நம்பிக்கையோடு, மெது வாக) அப்ப யாருது இது?

உமாகாந்த் : அந்த தேவிடியாப்பய ரஜனிநாத் கொடுத்தது! வாசல்லே ஒக்காந்திருக்கானே என்னோட வைரி. அவன்! ஒன் ஒண்ணுவிட்ட தம்பி! தேவி டியாச்சிறுக்கியோட பையன் கொடுத்த குழந்தை.

ரமாகாந்த் : (உச்ச ஸ்தாயியில் இரைந்து) தேவிடியாப்பயலே! வாயை மூடுடா உம்யா!

உமாகாந்த் : தந்திரமா தெனம்தெனம் போனா அவ, நானே பார்த்திருக்கேன். ரெண்டுபேரும் உள்ள உக்காந்திருப் பாங்க. கதவை மூடிக்கிட்டு. கேளுடா அவளை, தைரியமிருந்தா. கோழை.

ரமாகாந்த் : (சினந்து உமாகாந்த்தின் கைகளைப் பிடித்து முறுக்கி) நீ பொய் சொல்றேடா தேவிடியா பயலே! வேணு மின்னே கதை கட்றே. பொய்டா இதெல்லாம்! விஷமத்தனமா விஷத்தை பரப்பிக்கிட்டிருக்கே! என்னைப் பழி வாங்கப் பார்க்கறே இல்லே? எழவு பிடிச்ச முட்டாள் தேவிடியாப்பயலே! எழவு பிடிச்ச பன்னி! போக்கில்லாத புழுப்பயலே!

உமாகாந்த் : சரி, சரி. அதை ஒன் குழந்தைன்னே கூப்பிட்டுக்க. தலை மேல தூக்கி வைச்சுக்க. அதன் மூத்தி ரத்தை குடி. அதன் குண்டிக்கு வெளை யாட்டு காட்டு. நீ எழவு, அப்பனா யிருந்துக்க. பைசாவுக்குகூட அறி வில்லை. எழவு மோசம் போ. எழவு எங்களுக்கெல்லாம் கெட்ட பேரு உன்னால.

(உமாகாந்த் வீட்டைவிட்டு வெளியேறு கிறான். ரமாகாந்த் கருணைகொள்ளக் கூடிய நிலையில். பிறகு விசாரணைக் குரலில்)

ரமாகாந்த் : ரமா! (ரமா உள்ளே வரு கிறாள். அவள் நிலைமை—சரிந்த, பெருத்தவயிறு இரக்கத்தை உண்டாக்கு கிறது. கல் நோம்பிக் கொண்டிருக்கும் அரிசி நிறைந்த தட்டோடு நிற்கிறாள்)

ரமாகாந்த் : (அவளைப் பார்த்து) அப்ப...ஏன் இறங்கி வந்தே? எழவு

என்ன முடிவு பண்ணியிருக்கே? சாக ணுமா என்ன?

ரமா : (உண்மையான பதிலைத் தவிர்த்து) நாள் முழுக்க படுத்து படுத்து அசதியாயிருக்கு. அதனால இறங்கி வந்தேன்.

(பதில் ஏற்கனவே நன்கு யோசிக்கப் பட்டதாக தெரிகிறது)

ரமாகாந்த் : அசதியாயிருக்காம். சொல்றா இவ! எழவு அசதி ஒரு சாக்கு. ராத்திரி எப்படித் தூங்கினே? நல்லாத் தூங்கினீயா? இல்லாட்டி பேயும் பிசாசும் வந்து சினிமா காமிச்சுதா?

ரமா : (கல் பார்த்தபடி) கண்ணை மூடினதுதான் தாமதம். டக்னு முழிச்சிக் கிட்டேன். அப்புறம் தூக்கமே பிடிக் கலே, விடிய விடிய, அடுத்த வீட்டு கடிகாரம் அடிக்கடி மணிச் சத்தத்தை கேட்டுக்கிட்டே இருந்தேன். ஒரு நிலை யில தூங்கிப் போயிட்டேன்.

ரமாகாந்த் : அப்டியா?

ரமா : தனிமை என்னை வாட்டிக்கிட் டிருக்கு! இரவு முழுக்க ரஜனிநாத் இருக்கற கார்ஷெட்லேந்து விளக்கு வெளிச்சம். அதைப் பார்த்துக்கிட்டே இரவை கழிச்சிட்டேன். அதான் எனக்கு துணையாயிருந்திச்சு.

ரமாகாந்த் : ஆ! I See! உன்னோட சின்ன மச்சினன், அவனும் ராத்திரி முழுக்க தூங்கியிருக்கமாட்டான்.

ரமா : விளக்கைப் போட்டுட்டு தூங்கிட் டார்னு நெனைக்கிறேன், சில சமயம் இப்படி தூங்கிடறாரு.

ரமாகாந்த்; அப்படியா! தூங்கறான்னு தெரியும்!

ரமா: அவர் மனசிலே என்னவோ ஆறா ஓடிக்கிட்டிருக்கு. யாருக்கு என்ன தெரியும்? ஒண்ணுந்தெரியாது. உலகத்தைக் கண்டாலே ஒரு கோபம்... எப்பவும்.

(இதைச் சொல்லும் பொழுது அவள் மகிழ்கிறாள். ரமாகாந்த்தின் நெருடும் சந்தேகம் பற்றி அவள் அறிந்தவள் இல்லை. ஆகையால் எந்த குற்ற உணர்ச்சியுமில்லை)

நெனச்சா தூங்கறாரு... தோண்னா சாப்பிடறாரு...சிலசமயம் அதுமில்லை. நான் சாப்பிடக் கட்டாயப்படுத்தியிருப் பேன். பலதடவை. அதுவும் நின்னு போச்சு. அவரும் நான் கொண்டு போறதை சாப்பிடறதில்லை. டீயாவது குடிச்சிக்கிட்டிருந்தாரு. நீங்க அதையும் நிறுத்திட்டீங்க. தாயில்லாத குழந்தை. ஒண்ணுந்தெரியாத வயசிலேந்து வீட்டைவிட்டு வெளியில வாழுது. கவனிப்பார் கிடையாது.

ரமாகாந்த் : ஓ.. ஆனா நீ...

ரமா : நான் இருக்கேன், எத்தனை நாளைக்குத்தான் நான் தாங்கமுடியும்? அவன் வாழ்க்கை முழுக்கவா? இல்லை பின்னே அவனைப்பத்தி கவலைப்படற வங்க யாரு? அவனைப் பார்த்து சாப் பிட்டியா, காப்பிக் குடிச்சியான்னு விசாரிக்கறவங்க யாரு? தப்பி தூங்கினி யான்னு கேக்கறவங்க யாரு? யாருமே இல்லை. ஏற்கனவே கலங்கிப்போன மனசு இன்னும் கலங்காது? நெஜமா சொல்லுங்க. என்ன ஆகும்?

ரமாகாந்த் : அதே எழவுதான் எனக்கு ஆகுது. அப்புறம் என்ன? எனக்கு

நினைப்பு இல்லியா? எழவு தேளுங்க மாதிரி.

ரமா : (தன் நினைவுகளில் மூழ்கி) இந்த வயசில தனக்குன்னு ஒருத்தர் வேணும் இவர் கல்யாணம் பண்ணிக் கணும்னு சொன்னா அது குற்றம்! என் கிட்டேயே முரட்டுத்தனமா நடந்துக் கறாரு...

ரமாகாந்த் : ரைட் உன்னோட தேவை கள்ளாம் தீர்ந்தூடுச்சுன்னா, இதிலே ஏன் சிக்கிக்கறே?

ரமா : (புரியாமல்) என்ன சொல்றீங்க நீங்க? (திகைத்து. விநாடி கழித்து) என்னவோ சொன்னீங்களே... என் கிட்டே...

ரமாகாந்த் : (கட்டுப்படுத்திக்கொண்டு) இல்ல! வேற யாருகிட்டே போய் சொல்லுவேன்!

ரமா : நான் ஒரு முட்டாள்! உமா காந்த்கிட்டே என்னவோ பேசிக்கிட்டி ருந்தீங்களே? என்ன...?

ரமாகாந்த் : என்னை? ஆமாம் ஆமாம்! நம்மைவிட்டுப். போறானாம் வெளியில தங்கிக்கப் போறானாம்...அலுத்துப் போயிடுச்சாம் இங்கே!

ரமா : ஆமாம்! இங்க தொந்தரவு தான்... இப்பல்லாம் ... என்னைமாதிரி இப்படி ஒரு ஆளை வச்சுக்கிட்டு...

ரமாகாந்த் : ஆமாம் ஆமாம்! வேலைக் காரங்களும் கிடையாது ... போனும் இல்லே...

ரமா : ஏன் போனை எடுத்துக்கிட்டு போயிட்டாங்க?

ரமாகாந்த் : (கேள்வியை எதிர்பார்க் காததால்) டெலிபோன்காரங்ககிட்டே நான்தான் எடுத்துக்கிட்டுப் போய்யான் னுட்டேன்! பெரியதலைவலி! சனியன்! ஹலோ ஹலோ எழவு, நூறுதடவை ஒரு நாளைக்கு! ராத்திரியெல்லாம் ஹலோ! கால் பண்ணினா எழவு ராங் நம்பர்! ரத்னாகார் சேட்டை கூப்பிட்டா டாக்டர் பர்தான்வாலா லயன்ல வருவாரு! பிரயோஜனமில்லாத தலை வலி நமக்கு! எடுத்துக்கிட்டுப் போயிட் டாங்க! சனியன் போயிடுச்சு...

ரமா : அவர் எங்கே தங்கப்போறார்?

ரமாகாந்த் : நரகத்தில. (கட்டுப்படுத் திக்கொண்டு) எங்கே தங்கப் போறா னாம். எங்கே போயிட்டான் அவன்! போறேன்னு சொன்னான். நான் ரொம்ப ரொம்ப சந்தோஷம்னேன்.

ரமா : டெலிபோன் பத்திலாம் சொல்ல லியா?

ரமாகாந்த்: நீ முதல்லே மாடிக்குப்போ. போ... போ. கொஞ்சம் இடத்தை கொடுத்தா மடத்தைப் பிடுங்கி குரு பூஜை பண்ண ஆரம்பிச்சிடுவியே... போ நீ...இனிமே இறங்கி வராதே இங்கே...எழவு தலைவலி சனியன்

(அவள் அமைதியாக இருக்கிறாள். பிறகு உறுதி கொள்கிறாள். மேலே போகிறாள். ரமாகாந்த் தனியாக இருக் கிறான். பிறகு அலமாரியருகே சென்று கோப்பையை நிரப்பிக் கொள்கிறான்.)

(இருள் பரவுகிறது.)

## காட்சி—7

ஒளிபரவுகிறது. கார்ஷெட்டின் உள் பகுதி. ரஜனிநாத் துண்டு பேப்பரில் ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறான்

விசிலடித்தபடி. விசிலடிப்பதை நிறுத்தி சிந்தனை செய்கிறான். இடைவிடாமல் எழுதுகிறான். அப்பாவித்தனமாக எழுதியதை சுருட்டி எறிகிறான். மனோ நிலை குலைகிறது. அப்பா மெள்ள வருகிறார், களைத்துப் போய், மெலிந்துபோய், கண்கள் உள்ளே போய். கார்ஷெட்டின் கதவைத் திறந்து உள்ளே வருகிறார். கதவை மூடுகிறார். அதன்மீது முதுகை சாய்த்து நிற்கிறார் ரஜனிநாத் அவரைப் பார்க்கவில்லை.

அப்பா : ரஜனி (ரஜனி வந்து அவரை நோக்குகிறான்) நான். உன் அப்பா

(ரஜனிநாத் கண்கள் குமுறுகின்றன. ஒரு ஆவேசத்தில் 'வெளியே போ' என்று கத்தத் தோன்றுகிறது. ஆனால் வார்த்தைகள் வெளியே சீராக வருவதில்லை) நீ உள்ளே வரச் சொன்னா நான் வரேன்.

ரஜனிநாத் அவரை உள்ளே வரச்சொல்கிறான். தலையை அசைத்து, பிறகு சென்று தனியாக நிற்கிறான். இன்னும் கோபம் தணிந்தபாடில்லை)

அப்பா : (சுருட்டப்பட்ட பாயின் ஒரு மூலையில் அமர்ந்து, முணுமுணுத்து) நான் இங்கே வந்திருக்கிறது உனக்கு ஆச்சரியமா இருக்கு இல்லே?

(ரஜனிநாத் அமைதியாக நிற்கிறான்) நீ என் குழந்தைடா. இல்லே?

(ரஜனிநாத் உதட்டைக் கடித்து கட்டுப் படுத்திக் கொள்கிறான்)

அந்தக் கூட்டிக்! கொடுக்கற பசங்க மாதிரி நீ துரோகி இல்லே. தெனம் வருத்தப்படறேன். இந்த மாதிரி எழவு குழந்தைங்க இருக்கிறதைப் பார்த்து குழந்தைங்க, எழவு பண்ணின பாவம். நீதான் எனக்கு வந்து பொறந்ததிலே தனியானவன், செல்லப்பையன்.

(ரஜனிநாத் முதுகைத் திருப்பியபடி சிலைபோல நிற்கிறான்)

அப்புறம் என்ன சமாச்சாரம்? எல்லாம் நல்லபடியாயிருக்கா? சரியாத்தான் இருக்கு. நீ ஆரம்பத்திலேந்தே நல்ல பையன். அந்தக் கூட்டிக் கொடுக்கற பசங்கமாதிரி இல்லே. எழவு கல்லுக் குழவிங்க அவங்க. கழுத்தில கட்டிக் கிட்டு போகவேண்டியதுதான். காலன் கிட்டே, படிப்புமில்லே... பாட்டுமில்லே... கூட்டிக் கொடுக்கற பசங்களை குடிக்கச் சொல்லு. மூக்குவழிய குடிப்பான்க! இந்த உம்யா—கூட்டிக் கொடுக்கறப் பய. இருபது வயதிலேந்து குடிக்கறான் ரம்யாவும் இதேதான். தேவிடியாப்பய. பைசா சம்பாதிக்க முடியாதவன்.

(ரஜனிநாத் மிக்க முயற்சியோடு பொறுமையைக் கடைப்பிடிக்கிறான்) ரஜனி நீ தாண்டா என் பிள்ளை. உன் மேலே எனக்கு எவ்வளவு மதிப்பும் மரியாதையும் தெரியுமா? தூரத்திலிருந்து உன்னைப் பார்க்கறப்ப மனசு கெடந்து துடிக்கும். குழந்தையாயிருக்கறப்பவே நீ நிக்க ஆரம்பிச்சுட்டே. உன் கால்லேயே. மதிப்போட இருந்தே யாரைக்கண்டும் ஒனக்கு பயமில்லை. இவங்களைப் பாரு. வீட்ல இருந்த ஒருத்தனை இன்னொருத்தன் தூக்கி எறிஞ்சுட்டான். இவங்க கடைசில மண்ணாப் போகலே என்பேரு பித்தலே இல்லை.

(ரமாகாந்த் வந்து கதவின்பின் ஒளிந்து நிற்கிறான்)

ரஜனிநாத் : (மிருந்த முயற்சியோடு அமைதியான குரலில்) எதுக்கு வந்தீங்க நீங்க?

அப்பா : நல்லவேளை ஞாபகப்படுத்தினே நீ! வயசாயிடுச்சு எனக்கு. இந்த வயசிலே இந்த கூட்டிக் கொடுக்கிற பசங்க தர்ற தலைவலி நெனச்சா எழவு வயிறு எரியுது! எப்படிடா சொல்வேன் அதை! அவன் கை புழுபுழுக்கப் போவுது. அந்த மாமாப் பயலுங்க என்னைப் போட்டு அடிக்கிறானுங்க.

ரஜனிநாத் : சரி எதுக்கு வந்தீங்க நீங்க! இதுக்கு பதில் சொன்னா மட்டும் போதும்.

அப்பா : சொல்றேன். இந்த அடி உதையை என்னால தாங்க முடியலே ரஜனி! நீயாயிருந்தாலும் தாங்க மாட்டே, இந்த நிலைமை மாறணும். இது யாருக்கும் நடக்கக்கூடாது.

ரஜனிநாத் : தயவு செஞ்சு நீங்க ஏன் இங்கே வந்தீங்கன்னு சொல்றீங்களா?

அப்பா : அதான் இதபாரு கண்ணு நீதான் என் ஒரேபுள்ளை பாவம் உங்க அம்மா ஒரு சந்நியாசியா இருந்து செத்துப்போனா. பாவஜென்மம்! உன் முகத்தைக்கூடப் பார்க்கலே.

ரஜனிநாத் : (எரிச்சலோடு) எதுக்காக வந்தீங்க சீக்கிரம் சொல்லுங்க.

அப்பா : சொல்றேன் என்னோட பிள்ளை நீ ஒருத்தன்தான். நீ கார் ஷெட்ல இருக்கே. பிச்சைக்காரன்மாதிரி என் தப்பு. நெஜமா. அந்தப் பசங்க வீட்டை பிடிச்சுக்கிட்டு, பூர்வீகவீட்டை பிடிச்சுக்கிட்டு, பூர்வீக வீட்டை சாக்கடையாப் பண்ணிக்கிட்டு...சாக்கடைக் குழியாப் பண்ணிட்டு வீடு நாசமாகி கிடக்கு...இதை இன்னும் அல்ப தனமா பார்த்துக்கிட்டு...

ரஜனிநாத் : (சற்றுக் கடுமையாக) ரைட் எதுக்காக வந்தீங்க சொல்லுங்க

அப்பா : சொல்றேன் என்னா பொறுக்கமுடியல ரஜனி! இதை மா தணும். வேற யாராலயும் முடியாது நம்மளாலதான் முடியும். நான் சொ றதை கேளு. நான் உன்னை சப்போர் பண்றேன். பணம் வேணும்னா கொடு கறேன். கொஞ்சம் பணம் இருக்கு பத்திரம் புதுசா எழுதியிருக்கேன் பழைய தேதி போட்டு ஒரு லாயரை பிடிச்சு சீலும் வாங்கியிருக்கேன் சொத் தெல்லாம் ஒனக்கும் மானிக்குக்கு பிரிச்சு எழுதியிருக்கேன் உடனே ஒரு கேசைப் போடு. நான் சப்போர்ட் பண்றேன்! கோர்ட்டுக்கு நான் வந்து சாட்சி சொல்றேன். எல்லாத்தையும் மாத்திடலாம். இந்த மாமா பசங்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கலாம். இவங்க போய் தொங்கட்டும். ரிட் போட்டா தூள் பண்ணிடலாம். இதைப் பண்ணி முடிச்சா அமைதியா நான் கண்ணை மூடுவேன்.

ரஜனிநாத் : (வெளியே காட்டி) வெளியில போங்க.

அப்பா : கண்ணு, அப்படிச் சொல்லாதேப்பா. நீ என் ஒரே பிள்ளை (ரஜனிநாத்தின் கன்னத்தைத் தடவுகிறார்) அப்பாவோட அவமானத்தைக் கண்டு கலங்கற ஒரே பையன் நீ! எனக்குக் கிடைச்ச அவமரியாதைக்கு நீ பழி வாங்கு என் பையா...

ரஜனிநாத் : சொன்னேன் இல்லே, வெளியில போங்கன்னிட்டு, வெளியில போங்க.

(தோளில் உள்ள கையை உதறுகிறான். அப்பா பின் செல்கிறார்)

அப்பா : உனக்கு அதிர்ஷ்டம் வந்து சேரணும்னு ஆசைப்பட்டு வந்தேன்.

ரஜனிநாத் : போங்க வெளியில! போங்க! இங்கே இனிமே காலடி எடுத்து வைக்காதீங்க! போங்க வெளியில! இல்லாட்டி தூக்கிஎறிஞ்சிடுவேன்! (வெளியேறும் கிழவன் உள்ளே வரும் ரமாகாந்த் மேல் மோதிக் கொள்கிறான்)

ரமாகாந்த் : (எதிர்கொண்டு மோதிய பின்) அப்பா, வாழ்த்துக்கள் (அப்பா ஆத்திரத்துடன் வெளியேறுகிறார். துடிக்கும் இதயத்தோடு திரும்பிப் பார்த்தபடி ஓடுகிறார். ரஜனிநாத் சுவரைப் பார்த்தபடி நிற்கிறான்) (அவரைப் பார்த்தடி) வேற எங்கேயாவது போய் நல்லது பண்ணுங்க! நன்றி செலுத்துவாங்க! பாவம் அப்பா! நீ சொன்னதை செஞ்சிருக்கணும் ரஜனி!

ரஜனிநாத் : எனக்கு எது செய்யணும், எது செய்யக்கூடாதுன்னு தெரியும்.

ரமாகாந்த் : உனக்கு பொறப்பு கொடுத்த அப்பா. அவரைப் பார்க்க பாவமா இல்லை உனக்கு?

ரஜனிநாத் : (திரும்பி நன்றாகப் பார்த்து) உன்னைப் பார்த்தாதான் பாவமாயிருக்கு.

(ரமாகாந்த் குழப்பமடைகிறான், திடீரென்று வீட்டிலிருந்து ரமா அலறும் ஒலி. இருவரும் வேகமாக ஓடுகிறார்கள். மானிக் வெளியே வருபவள் மோதிக் கொள்கிறாள். அவள் முகத்தில் பயங்கரமும், கொடூரமான மகிழ்ச்சியும்)

மானிக் : நான் செஞ்சிட்டேன், திட்டம் போட்டபடி எலுமிச்சம் பழத்தை வெட்டி விபூதியைப் பூசிட்டேன், ஏழுதடவை இடுப்புலயும், வயத்திலேயும், கலையப் போவுது கரு. கரையப்போவுது அண்ணியோட குழந்தை. இனிமே இருக்காது. இருக்காது.

(அவள் உணர்ச்சி பொங்க பைத்தியம் பிடித்த மாதிரி ஓடுகிறாள். ரஜனிநாத் கலங்கிப் போய் ஒருபக்கம் ஓடுகிறான். மானிக் சிரித்தபடி வெளியேறுகிறாள். ரமாவின் அறை. ரமாகாந்த் நுழைகிறான். படுக்கையின்முன் சாய்கிறான். ரமா நடுநடுங்கியபடி உட்கார்ந்திருக்கிறாள். உடை அலங்கோலமாய்.)

ரமாகாந்த் : என்ன நடந்துச்சு? என்ன நடந்துச்சு ரமா? (இங்குமங்கும் பார்த்து) யார் வந்தாங்க இங்கே? மறுபடியும் பிரமையா? இன்னும் எழவு எவ்வளவு நாள் பயப்பட்டு சாகப் போறே? நாள்முழுக்க எழவு தலைவலி. பைசா பெறாத எழவு பாடு! சரியா படுத்துக்க. (தூங்குவதற்கு உதவி செய்கிறான். இல்லை! இல்லை!' என்று சொல்லியபடி உட்கார்ந்த வண்ணம் இருக்கிறாள்) என்ன நடந்ததுன்னாவது சொல்லேன்! (அவள் ஒன்றும் சொல்லவில்லை) பேசு, சொல்றேன் இல்லே! இல்லாட்டி அடிச்சு நொறுக்கிடுவேன். சொல்லு சீக்கிரம்.

ரமா : (மிகுத்த முயற்சியுடன்) என் நாத்தனார். அவ வந்தா...

ரமாகாந்த் : யாரு? மானிக்கா? அந்த தேவிடியாளா? நான் இங்கே இல்லேன்னு தெரிஞ்சிருக்கு. என்ன சொன்னா அவ? சீக்கிரம் சொல்லு.

(ரமா பயத்தில் நடுங்குகிறாள். கண்ணீர் பொங்குகிறது) கேக்கறேன் இல்லை? என்ன சொன்னா அவ? சொல்லாட்டி எழவு ஒழி. (தலைமுடியைப் பிடித்து அவளை உயர்த்துகிறான்) அந்தத் தேவடியா என்ன சொன்னா? சொல்லு.

ரமா : அவ... எலுமிச்சம் பழத்தை நறுக்கினா.

ரமாகாந்த் : (ஆத்திரத்துடன்) நறுக்கினாளா? அப்புறம்...

ரமா : (ஆமாம் என்று தலையாட்டி எழுந்து நிற்கிறாள்) விபூதியை இங்கே தடவினா...அப்புறம் சொன்னா அவ (வெடித்தழுகிறாள்) உன் கர்ப்பம் கலையப் போவுது! குழந்தை கரையப் போவுது! உன் கர்ப்பம் கலையப் போவுது. (படுக்கையில் புரண்டு அழுகிறாள். ஒரு கணம், தாயைப் பறிகொடுத்த குழந்தை போல் கதறுகிறாள்.)

ரமாகாந்த்: (உச்சக் குரலில்) அழறதை நிறுத்து. சொல்றேன் அழறதை நிறுத்து! எவனும் எழவு இங்கே சாவல்லே! அழறதை நிறுத்து! ஒரு கஷ்டத்துக்கு அப்புறம் இன்னொரு கஷ்டம்! பேசாம படுத்துக்கிட்டிரு... ஒரு அட்சரம் கூடப் பேசக்கூடாது! வாயை மூடு! இல்லாட்டி கொன்னு எறிஞ்சிடுவேன். (ரமா கலவரமடைந்து அதன்பின் அமைதியடைகிறாள்) என் குழந்தை சாகாது. அந்த தேவிடியா போட்ட சாபத்தினால. குழந்தை என்னோடதா இருந்தா சாகவே சாகாது.

ரமா : (கிளம்பியபடி) என்ன சொல் நீங்க நீங்க (விநாடிக்குப்பின்) என்ன சொன்னீங்க நீங்க?

ரமாகாந்த் : நான் என்ன சொல்றேன்னு உனக்கு நல்லாவே புரிஞ்சிருக்கும். பேசாம படுத்து தூங்கு...முணுமுணுக்காம...

(டக்கென்று திரும்பி வெளியேறுகிறான். ரமா கல்லாய் சமைந்து நிற்கிறாள்)

(இருள்)

காட்சி-8

ஒளிபரவுகிறது. இரவு. கனமழை பெய்து கொண்டிருக்கிறது. இடி மின்னல். வரவேற்பு அறை. ரமா உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். குடித்தபடி. மந்தமான, களையற்ற முகத்துடன். துப்பாக்கி அருகில். காலிங் பெல் ஒலிக்கிறது. 1, 2, 3 பலதடவை ஒலிக்கிறது. ''அடிச்சுக்கிட்டேயிரு'' என்கிறான் அவன் கதவு தட்டும் ஒலி. மணி ஒலிக்கிறது. நிற்கிறது. உமா காந்த் சபித்துக் கொண்டிருக்கும் வார்த்தைகள் தெளிவில்லாமல் கேட்கிறது. தட்டல், கத்தல், ''அண்ணி'' என்ற குரல்கள். ரமாகாந்த் இருந்த இடத்திலிருந்தே 'வெயிட். அவ வரா' என்கிறான். அழகற்ற புன்னகை முகத்

தில். இதற்குப் பிறகு கதவின் மேல் விழும் ஒவ்வொரு தட்டலுக்கும் உதைக்கும் அவனுடைய பதில் 'உம்...மேலே' ''இன்னும் பலமா'' நன்றாகக் குடித்த படி தட்டும் ஒலி நிற்கிறது. அழுகை நிற்கிறது. மழை ஓசை மட்டும் கேட்கிறது. சிறிது நேரம் கழித்து பின்பக்க முன்ன வேறு கதவை தட்டும் ஒலி. ரமாகாந்த் இதற்கும் முன் போல எதிர் வினை கொள்கிறான். மழை பெய்து கொண்டே இருக்கிறது. பிறகு கதவு இடிபடும் பரந்த ஓசை. ''ரம்யா, தேவிடியாப்பயலே. கொஞ்சம் பொறுத்துப்பாரு'' என்று உமாகாந்த் இரைவது தெளிவில்லாமல் காதில் விழுகிறது. பிறகு உதை ஒலி குறைகிறது. இறுதியாக ஒன்று. நிசப்தம். மழை ஒலி மட்டும் தூரத்தில் எங்கோ. மழையில் நனைந்த நாயின் குரைக்கும் சப்தம் குரூரமாக.

ரமாகாந்த் : (மந்தமான குரலில்) பை பை பிரதர் பெஸ்ட்.ஆப்ஃ லக். ஹாப்பி லைபஃ (குடிக்கிறான்) பிரதர், நீதான் தேவிடியாப்பயனு நெனச்சிக்கிட்டிருக்கே. நோ. பிரதர் நான்கூட தேவிடியாப்பயன். நாம எல்லோரும் தேவிடியாப்பசங்க. ஒண்ணுகூட ஒண்ணு குறைச்சல்) யாருக்கும் யாரும் குறைச்சல் இல்லை. பிரதர், தெரியும் எனக்கு. இந்த வீட்டை நீ கேட்டேன்னு தெரியும். இந்த பங்களா, இந்த பேய் பங்களா, நீ சொல்லலே. ஆனா, தெரியும் எனக்கு. 'சொல்லட்டுமா. இங்கே ஒரு பேய் இருந்துச்சு. அது உனக்கு சகல சுபிட்சத்தையும் கொடுத்திச்சு. ஒரு பேய், ஒரு ஆவி, உனக்குள்ளே இருந்திச்சு. ரைட்? அமாவாசைக்கு அடுத்த நாள், எலுமிச்சம் பழம், தேங்காய், குங்குமம் தரையில கிடந்தது. நீ பண்ணினது அது. இந்த எலுமிச்சம் பழம் தேங்காய் விவகாரம் மரியாதைக்குரியது தம்பி! பேய் உன் எழவுக் கட்டுப்பாட்டில இருந்திச்சு. என்னை உறிஞ்சிக்கிட்டு...தெரியுண்டா எனக்கு. எல்லாம் ஏமாத்து வேலை. எழவு ஏமாத்து வேலை... பேயும் கிடையாது, ஒரு மயிரும் கிடையாது. நான்தான் அந்த இழவு பேய். வேற யாரு? நான்தான் அந்த இழவு பேய். ஆனா தம்பி நீ தனிப்பட்டு ஒரு வேலை தேடிப் போனே. இந்த வீடு வேணுமின்னு சொன்னே. என்னை வெளியில கிளப்ப பார்த்தே ரைட், எல்லா எழவையும் நீயே எடுத்துக்க. எழவு தமாஷ்! எழவு பணம்! எழவு பேய். தம்பி நீ தப்புக் கணக்கு போட்டே. ரமாகாந்த் முட்டாள் இல்லேடா. தனியா கிளம்பிடமாட்டான்! எழவு நாசம்! படுபாதாளம்! எனக்குத் தெரியும்!

நரகத்துக்குத்தான் போறேன். எமலோகத்துக்கு. அப்பா, அம்மா, தங்கை, மனைவி, குழந்தை நோ. அது என்னோடதில்லை—என் தம்பியோட குழந்தை! என்னோடதில்லை. அவனோடது. தேவடியாச் சிறுக்கியோட பையன் பெத்த குழந்தை! எழவு துரோகி! எழவு வண்டியடிக்கிறபய. எழவு வைப்பாட்டியோட பய (துப்பாக்கிக்காக தடுமாறி) எழவு கொன்னுடறேன் அவனை. எழவு தீர்த்திடறேன் அவனை. எழவு தேவடியாப்பய.

(பாட்டிலைத் துப்பாக்கிபோல் பிடித்து கொண்டு எழுந்திருக்கிறான். மது வழி

கிறது. கையை சேர்த்துக் குவித்துப் பிடிக்கிறான். பாட்டிலைக் கீழே வைக்கிறான்)

ஓ...ஓ...(உணர்ச்சிப் பெருக்கில் புலம்புகிறான்) நான் ஒண்ணுக்கும் உதவாதவன். எழவு சல்லிக்காசுகூட பொறாதவன். வெத்துப்பயல். எழவு தேவடியாச்சிறுக்கி...! பன்னிப்பய! நான் என் மனைவியை போக விட்டுட்டேன். (தலையைத் தூக்குகிறான்)

பிரதர், அது என் குழந்தை இல்லை! என்னோடதில்லை. எழவு குழந்தை அவனோடது. ஒண்ணுமில்லாதவன். உபயோகமில்லாதவன். எழவு பன்னி! தம்பி, நானே என்னைக் கொன்னுக்கறேன்.

(துப்பாக்கியை தேடுகிறான்) எழவு துப்பாக்கி. எழவு என்னோட துப்பாக்கி (துப்பாக்கியைக் கரங்கள் தொடுகின்றன)

தம்பி! எல்லாம் ஆயிடுச்சு! முடியற வரை உறிஞ்சிட்டானுங்க! தோத்துப் போயிட்டேன்! கடன்காரன்க! பேங்க்! எழவு கோர்ட்! ஜெயிலுக்குப் போகணும்! எழவு அஞ்சுவருஷம் ஏழுவருஷம் கஷ்டமான வேலை! ரமாகாந்த் பித்தலே! ஆயுள் தண்டனை! எழவு தோத்துப் போயிட்டேன்! மனைவி இல்லை குழந்தை இல்லே! தூக்கி எறிஞ்சுட்டானுங்க ஜெயிலுக்கு...கிளம்பிக்கிட்டிருக்கேன்!

ஜெயில்! ஏ......

(துப்பாக்கி முனையின் சனியனை தாவாங்கட்டையில் அழுத்திக் கொள்கிறான். விரல்நுனி இயக்கும் விசையில்) ஒண்ணு தெரிஞ்சுக்க பிரதர்! பேயெல்லாம் காட்டு. எழவு வீட்டை மட்டும் தரமாட்டேன்! எழவு ஒன்னை சுகமா இருக்கவிடமாட்டேன். என் உயிர் போனாலும் வீட்டைக் கொடுக்கமாட்டேன் (துப்பாக்கியை நாற்காலி மீது வைக்கிறான் மனோநிலையில் மாற்றம்) லா...லாலாலா...லாலாலா... ரேடியோ கிளப், 'தம்பி!...கைபர்! மோகினீஸ்! டாஜ்! வெனீஸ்! டான்ஸ் ம்யூசிக்! அழகிங்க! லாலாலா...எழவு சொசைட்டி லேடீஸ்! ஹவ் டூ யூ டு! கிளாட் டு மீட் யூ! ஓ, ஹவ் ஸ்வீட் ஆஃப் யூ! எழவு உதைடா அவனை! மயிரு தமாஷ்! உதை! (காற்றை உதைத்து கீழே சரிகிறான்)

மூடம், சனியன், கால் இல்லே! பாவம், கால் இல்லை! அவனுக்கு பைசா போடுடா! கடவுளின் கருணை! பாவம் பிச்சைக்காரன்! எழவு கடவுளின் கருணை! பாவம் முடவன்!

(பக்கத்து டேபிளுக்கு நகர்கிறான். எழுந்திருந்து விடுவிடுவென்று ரெண்டு மூன்று முறை குடிக்கிறான். தாவுகிறான்)

இப்ப பரவாயிலலை பிரதர்! ஐ ஃபீல் ஃபைன்! ஆனா தலைதான் கொஞ்சம். (திடீரென்று ஆவேசமாக கத்துகிறான்) குழந்தை என்னுதில்லே! என்னுதில்லே! எழவு என்னுதில்லே! என்னுதில்லே! அது அவனுது. அந்த தேவடியாச் சிறுக்கியோட பையன் உண்டாக்கின குழந்தை! என் சித்தி வளர்த்தெடுத்தாளே எழவு அந்தப் பயலோட குழந்தை! எழவு என் வீட்ல வளர்த்தா அவனை.

பிரதர் நான் அவனைக் கொல்லுவேன்! அவனைக் கொல்லுவேன்!

(காயமுற்ற கொடிய விலங்காய் திரண்டெழுகிறான். நாற்காலியின் பின்பக்கத்தைப் பிடித்தபடி ஒரு கை. ஆழ்ந்த குரலில்)

தம்பி, தெரிஞ்சுக்க. கர்ப்பத்தைக் கலைச்சிடுவேன் என்னோடதில்லை. எழவு எதிரியோடது. என் எதிரி. கலைச்சிடுவேன்.

வெளியில போடா தேவடியாப்பையா! இன்னொருத்தன் பொண்டாட்டியோட இது கேக்குதோ! நீ வேணாம் நீ வேணாம். பன்னிக்குப் பொறந்தப் பயலே. போறும். சனியனை நானே கொன்னுடறேன். வயத்திலேந்து வெளியில பிடிச்சு இழு. கிழிச்சு வெளியில எடு. (திடீரென்று மிக இனிமையான குரலில்) ரமா கண்ணு! (கோபமாக) எங்கே இருக்கே ரமா? இங்கே வா...ரமா...இங்கே வா... (படிக்கட்டுகளில் தடுமாறுகிறான். தெளிவில்லாத குரலில் ரமாவைக் கூப்பிட்டு) நீ வரமாட்டே! நீ வரமாட்டே! ஃபைன். அப்ப நான் வரேன். எழவு பிரயோஜனமில்லாத எழவு குழந்தை! இடறி விழுந்து கதவு வழியே வெளியேறுகிறான் கத்திக்கொண்டே. தெளிவாக ஏதுமில்லை. மழையின் ஓசையும் அவன் போடும் இரைச்சலும் சங்கமித்து, பலத்த இடி. அது எங்கேயோ விழுந்து விட்டது. சீராக, பலத்த மழையின் ஓசை)

(ஒளி மங்குகிறது)

(இருட்டில், ஒற்றைக்கழுகிடும் கூர்மையான இரைச்சல்)

## காட்சி—9

ஒளி வருகிறது. அமைதி வேறு. ஒலியே இல்லை. கார்ஷெட்.

ரஜனிநாத் :

ஐந்து கழுகுகளின் கதை
அவ்விதம் முடிந்தது.
சபிக்கப்பட்ட மனிதர்கள்-இல்லை
சபிக்கப்பட்ட கழுகுகள்
மனிதர்களாக வாழ்ந்தனர்
ஓ...அவர்களுக்கு சிறிதாவது
கருணை காட்டுங்கள்
வழிகாட்டுங்கள்
கருணைக் கைகொடுத்து
உதவுங்கள்
விடுதலையைக் கொடுக்கும் அது
பாவஜென்மங்கள் தங்கள்
உடலை எரிக்கும், முதல்
மூச்சை விடும்
மயானத்தை காட்டுங்கள்
எதிர்காலம் இல்லை.
அவர்களுக்கு
நம்பிக்கை இல்லை
எப்படியும்
தப்ப வழியே இல்லை
எதுவுமே இல்லை
அவர்களுக்கு—மற்ற
யாவர்க்கும்.

(காற்றின் ஒலி வலுக்கிறது. நம் கண் முன் தெரிவதெல்லாம் அல்பமான விஷயங்களே, குழந்தையின் பொம்மை போல். தனிமையுணர்வு நம்மைக் கவ்வுகிறது. ரஜனிநாத் கார்ஷெட்டிற்குள் நுழைகிறான். காலைத் தேய்த்து நடந்தபடி, உடல் குறுகி நடுங்குபவன் போல்)

O

மகஸேஸே விருது பெற்ற நாடகாசிரியர்

## நிநாசம் கே. வி. சுப்பண்ணா

கர்நாடக மாநிலத்தின் ஷிமோகா மாவட்டத்தில் உள்ள ஒரு சிறு கிராமமான ஹெக்கோடு, 1949-ல் 'ஸ்ரீ நீலகண்டேஸ்வர நாட்யசேவா சங்கம்' எனும் கன்னட அமெச்சூர் நாடகக்குழு ஆரம்பிக்கப்பட்டதன் மூலம் கலை உலகின் கவனத்திற் குள்ளானதென செய்தியை ஆரம்பித்ததால் தமிழ்கூறும் நல்லுலகம் கொட்டாவி விடலாம். அப்படியென்ன பெரிய நிகழ்ச்சி அது! அதைப்போல இங்கும் பல ஊர்களில் பல நாடக சபாக்கள் இன்னும் முன்னேயேக்கூட ஆரம்பிக்கப்பட வில்லையா என்றும்கூட கோபக்குரல்கள் வரலாம். ஆனால் எத்தனை 'ஸ்ரீ நீலகண் டேஸ்வர நாட்ய சேவா சங்க'ங்கள் 'நிநாசம்' ஆக வேர் கொண்டு, நாடகம், சினிமா, புத்தக வெளியீடு, நாடகப் பயிற்சிப் பள்ளி, புது தாக்கம் கொண்ட நிறுவனங்களாக உரம் பெற்றிருக்கின்றன எனக் கேட்டால், திரும்பிப் பார்த்தால் இது தமிழ்கூறும் பொல்லாத உலகமாகிவிடும். சரி. தூங்கும் புலியை இடற வேண் டாம். செய்திக்கு வருவோம்.

கர்நாடகாவில் இயங்கும் 'நிநாசம்' எனும் நாடக இயக்கம் பல்வேறு முனைகளில் வளர்ந்து ஒரு நிறுவனப்போக்காக மாறி வந்தாலும் அதன் அடிப்படை உணர்வு களை இன்னும் கொண்டுள்ளதென்பது இவ்வாண்டுக்கான தெற்காசிய நாடுகளுக் கான (பிலிப்பைன்ஸ் நாட்டு) மகஸேஸே பரிசு அறிவிக்கப்பட்டதான செய்தி ஏற்படுத்திய கவனிப்பு மூலம் தெரியவருகிறது. நாடகம் பற்றிய சிந்தனை உள்ள வர்களின் உலகிலும், மக்களுக்கான கலை வடிவங்களைக் கையாள்வோரின் கவனத் திலும் நிநாசமும், அதன் அமைப்பாளருள் ஒருவரான கே. வி. சுப்பண்ணாவும் மீள ஒரு புதுப்பித்தலைப் பெற இச் செய்தி உதவியிருக்கிறது, பரிசுகளும் அவார்டுகளும் தனிமனிதர்களுக்கு முக்கியமல்ல என கே. வி. சுப்பண்ணாவும் ஒப்புக் கொள்கிறார். ஒரு அமைப்புக்கு, ஒரு சமுதாய வளர்ச்சிச் செயலுக்கு அங்கீகாரம் அளிப்பதான பரிசினை ஏற்கலாம் என்பது அவரது கருத்து. 'நிநாசம்' தொடர்பான பணிகளுக் காக 1983லும் பின்னர் தற்போது இரண்டாவது முறையாகவும் ஃபோர்ட் நிறுவன

உதவியைப் பெற்ற திரு. கே. வி. சுப்பண்ணா கர்நாடக மாநில அரசு பரிசுகளை மறுத்திருக்கிறார். தற்போது அளிக்கப்பட்டுள்ள மகஸேஸே பரிசு உட்பட அனைத்து கௌரவத்திற்கும் உரியவர் தன்னுள்ளே லோஹியாவின் சோஷலிச சித்தாந்தக் கருத்துகளை ஊன்றிய சாந்தவேரி கோபால கௌட எனவும் கே. வி. சுப்பண்ணா கருதுகிறார்.

கன்னட மொழியில் புதிய நாடக ஆக்கங்களோடு ஷேக்ஸ்பியர், மோலியர், பிரக்ட் முதலானோரையும், சமஸ்கிருதத்திலிருந்து பழைய நாடகங்களுடன் சோமனதுடி முதலான நாவல்களையும், பரீட்சார்த்த முறையில் மேகதூத, லோக்சாகுந்தலா போன்ற நாடகங்களையும் கே. வி. சுப்பண்ணாவும், நிநாசமும் கொணர்ந்து கன்னட கிராமங்களின் பார்வையாளர்களுக்கு புதிய ஒரு கவனிப்பை அளித்திருக் கிறார்கள். நகர கலாச்சாரம், கிராமிய கலாச்சாரம் என இரு பிரிவுகளை ஏற் படுத்திக் கொண்டுள்ள இன்றையப் போக்கிற்கு ஒரு இணைப்புக் கோடாகவும் சுப்பண்ணாவும் நிநாசமும் கருதப்படுகிறார்கள். இந்தியப் புராண, பழங்கதைகளி லிருந்து கதைக் கருக்களை எடுத்தாளும்போதே, அவற்றினுள் இன்று பாதிப்புள் ளாக்கும் விஷயங்களை விமர்சனத்துடன் வெளிப்படுத்தும் அடிப்படை நோக்கம் கே. வி. சுப்பண்ணாவையும் நிநாசத்தையும் கிராம மக்களிடம் வளரச் செய்தது. மாற வேண்டிய சமுதாயத்தில் சாதாரண மனிதனுக்குத் தேவைப்படும் சிந்தனையை அடைய நிநாசம் உதவியிருப்பதாய் கே. வி. சுப்பண்ணா பெருமை கொள்வதில் 1949லிருந்து கண்டுள்ள வளர்ச்சி தெரிகிறது. நிநாசத்தை முன்னுதாரணமாகக் கொண்டு, அந்நிறுவனத்தின் சாத்தியமான உதவிகளோடும் இன்று பல கன்னட நாடகக் குழுக்கள் பல்வேறு கிராமங்களிலும் சிறு நகரங்களிலும் உயிர்கொண்டு தங்களது நோக்கங்களை வளர்த்துக்கொண்டு வருகின்றன. இந்நிலை இன்றைய தமிழ்நாட்டுப் போக்குடன் ஒப்பிட்டு நோக்க வேண்டிய உண்மை.

—குமரன் சாத்தன்

# CRY OF ASIA

பிலிப்பைன்ஸ் நாட்டில் ஆரம்பிக்கப் பட்ட ஆசிய, பசுபிக் மக்கள் கலாச்சார ஒருங்கிணைப்புக் குழு (AC-PC) 'கிறை ஒவ் ஏசியா' எனும் இசை—நாட்டிய—நாடக நிகழ்ச்சியுடன் உலக சுற்றுப் பயணத்தை மேற்கொண்டு இப்போது மேற்கு ஜெர்மனிக்கு வந்துள்ளனர். பல நகரங்களிலும் மேடையேறிய இந் நிகழ்ச்சி மேற்கு ஜெர்மனியில் இறுதி யாக இம்மாதம் 21, 22ஆம் திகதிகளில் மேற்கு பெர்லினில் மேடையேறுகிறது. அதன் பின் ஒஸ்ரியா, கொலன்ட் நாடு களில் இந்நிகழ்ச்சி நடைபெறவுள்ளது.

இந்த இசை—நாட்டிய—நாடகத்தில் பங்கு பெற்றும் கலைஞர்கள் பிலிப் பைன்ஸ், தென்கொரியா, மலேசியா, தாய்லாந்து, இந்தோனேசியா, இலங்கை, ஒஅரியோஆ, பாகிஸ்தான், இந்தியா, யப்பான் ஆகிய நாடுகளைச் சேர்ந்தவர்கள். அனைவருடையகூட்டு முயற்சியில் இந்நிகழ்ச்சி உருவாக்கப் பட்டுள்ளது.

இந்நிகழ்ச்சியில் பொது மொழியென்று ஏதும் இல்லை. ஒவ்வொரு கலைஞரும் தனது மொழியிலேயே தனக்குரிய பகுதியைக் கதைக்கிறார் அல்லது பாடு கிறார். உதாரணமாக இலங்கைக் கலைஞர் தமிழிலும் தென்கொரியக் கலைஞர் தனது மொழியிலுமே உரை யாடுகிறார்கள்.

ஒவ்வொரு கலைஞரும் தங்களுடைய கலாச்சாரப்படி உடையணிந்து, தங் களது பாரம்பரிய ஆட்டங்களையே ஆடி, பாரம்பரிய இசையையே இசைக் கிறார்கள்.

இந்நிகழ்ச்சியில் 3 பாத்திரங்களுக்கு மட்டுமே பெயர் சூட்டப்பட்டுள்ளது.

இனாஓ—பூசாரி

மினோகாவா—பலம் வாய்ந்த தீய பறவை.

நூனோ—மண்ணிலிருக்கும் நல்ல தேவன்

சுவானோ—கிராமத்து இளம் பெண்

ஏனைய பாத்திரங்கள் பெயரிடப்படா மல் சமூகமாகவும், பறவைகளாகவும், தீய ஆவிகளாகவும் பங்காற்று கிறார்கள்.

## காட்சி—1

மேடையின் பின்பகுதியில், மத்தியிலே ஒரு திரைச்சீலை தொங்கவிடப்பட்டுள் ளது. அதில் பிரம்மாண்டதாக பிரகா சிக்கும் சூரியன் வரையப்பட்டுள்ளது. மேடையின் இரு மருங்கிலும் ஆசிய நாட்டு வாத்தியங்கள் வைக்கப்பட் டுள்ளன.

அரங்க விளக்குகள் அணைந்ததும், வெளியே இருந்து சுளீரென்ற குரல் ஒலிக்கிறது. ''சே. ஆ...சே. ஆ'' (பற வைகளே, பறவைகளே) என்று பாடிய படி வெள்ளை அங்கி அணிந்த ஒருவர் கையில் மெழுகு திரியுடன் முன்னே வருகிறார். அவர் பின்னே வரிசை

யாக தங்கள் கலாச்சார உடைகளை அணிந்திருந்த கலைஞர்கள் மௌன மாக கையில் காகித அட்டைகளைத் தாங்கியபடி ஊர்வலமாக வரு கிறார்கள்.

மேடையில் ஏறியதும் வெள்ளை அங்கி அணிந்திருந்தவர் மெழுகு திரியை மத்தியில். தரையிலே வைத்துவிட்டுத் தொடர்ந்து பாடுகிறார். அவர்பின்னே வந்தவர்கள் மேடையில் ஏறி நீளப் பாட்டுக்கு வரிசையாக நின்று கொள் கிறார்கள். இப்போது அவர்கள்கையில் வைத்திருந்த அட்டைகள் துல்லிய மாகத் தெரிந்தன. ஒவ்வொரு நாட்ட வர்களும் வைத்திருந்த அட்டைகளில் அவர்களின் நாடுகளின் பெயர் கள் குறிக்கப்பட்டு, அந்தந்த நாடு களில் மனித உரிமைகள் மீறப்படுவது ஓவியங்களாக வரையப்பட்டிருந்தது. இடமிருந்து வலமாக ஒஅரியோஆ, பாகிஸ்தான், இந்தோனேசியா, யப் பான், பிலிப்பைன்ஸ், சிறிலங்கா, இந்தியா, தென்கொரியா, மலேசியா, தாய்லாந்து நாட்டவர்கள் அட்டை களை வைத்திருந்தார்கள்.

வெள்ளை அங்கியுடன் நின்றவர் கையில் வைத்திருந்த காகிதத்துண்டை வாசிக்கிறார். ஆசிய, பசுபிக் நாடு களின் பெயர்கள் வாசிக்கப்படுகின்றன. பின் அக்கடுதாசியை எரிந்து கொண்டி ருந்த மெழுகு திரியில் பிடித்து தீயிட்டு, சாம்பலாக்கி, காற்றில் பறக்கவிடு கிறார். அவர் பாட மற்றவர்களும் சேர்ந்து பாடுகிறார்கள். பிறகு மண்டி யிட்டு வணக்கம் தெரிவிக்கிறார் கள்.

காட்சி—2

மேடையின் ஒரு பக்கத்திலிருந்து ஒரு வர் ஆர்மோனியம் வாசித்துக்கொண்டு பாட, மறுபக்கத்தில் ஒருவர் புல்லாங் குழல் இசைக்கிறார். தேவதையொன்று வந்து சூரியனின் முன் நடனமாடு கிறது.

காட்சி—3

ஆண்கள் குழாமொன்று அம்பு, வில்லு ஈட்டிகளுடன் வந்து வேட்டையாடு கிறது. அவர்கள் ஆடிப்பாடி சந்தோச மாக வேட்டையாடுகிறார்கள். சில நிமிடங்களின் பின் பெண்கள் குழாம் வந்து வயலில் வேலை செய்கிறது. அவர்களும் தங்களுக்குள் கதைத்துச் சிரித்து உற்சாகமாக வேலை செய் கிறார்கள்.

வேட்டையாடிக் கொண்டிருந்த ஆண் கள் குழுவினர் ஒரு கொழுத்த வேட்டை யைப் பெற்றுக் கொண்டு விட்டார்கள். அதைச் சுமந்து வந்து வயலில் வேலை செய்து கொண்டிருந்த தங்கள் மனைவி யருக்கு காட்டி சந்தோசப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது வெளியே யிருந்து கூச்சல் வருகிறது.

ஆண்கள் குழுவில் ஒருவர் முன்னால் வந்து ''பூசாரியார் இனாஓ வாறார். படுகிழவன். எங்களுக்கு அவர் பகிடிக் காற பூசாரியார். ஊரில எல்லாக் காரியங்களுக்கும் வருவார்'' என்று சொல்லிச் சிரிக்கிறார்.

எல்லோரும் சிரித்தபடி தெருவைப் பார்க்க, வயதுபோன பூசாரியார் நொண்டியபடி, கைத்தடியை ஊன்றிக்

கொண்டு வருகிறார், அவர் தனக்குத் தானே பெரிதாகக் கதைத்தபடி நடந்து வருகிறார்.

அவரின் பின்னால் கையாள், வளைந்து நெளிந்தபடி பெரிய தட்டொன்றைச் சுமந்து கொண்டு வருகிறான்.

ஆண்கள் குழுக்கள் தங்களின் வேட்டையைப் பூசாரிக்கு காட்டிச் சந்தோசப்பட, பூசாரி தனது கையாளுக்கு கட்டளையிட, அவன் தான் கொண்டு வந்த தட்டில் அவர்களின் வேட்டையின் பெரும் பகுதியை எடுத்துப் போட்டுக் கொள்கிறான். பூசாரி அவர்களுடன் கதைத்துச் சிரித்து அவர்களுடைய வேட்டைக்குப் பாராட்டி விட்டு திரும்பிப் போகிறார்.

அவரின் கையாள் வயலில் வேலை செய்த பெண்களிடமும் ஒரு பங்கை வாங்கித் தட்டில் போட்டுக் கொண்டு வளைந்து, நெளிந்து செல்கிறான்.

அவர்களின் செய்கைகள் தங்களுக்குப் பிடிக்காததை ஆண்கள்குழு நையாண்டி செய்து சிரிக்கிறது. பிறகு எல்லோரும் ஒன்றாகச் சமைத்து சாப்பிடுகிறார்கள். அவர்களில் ஒருவர் ஆடிப்பாடி அவர்களை மகிழ்விக்கிறார்.

''அந்தநாளிலே இந்த மனிதர்கள்
அனைவரும் சமமுடன் வாழ்ந்தனரே
அப்பொருள்எனது, இப்பொருள் உனது
என்ற பேதங்கள் தோன்றவில்லை.
பெரியவர், சிறியவர், வறியவர்,
உடையவர் பேதமில்லை.
இது புராதன காலப்பொதுவுடமை''

அவரின் பாட்டுக்கு மற்றவர்கள் 'தகதிமி, தகதிமி' என்று சந்தமிசைக்கின்றனர். எல்லோரும் சாப்பிட்டு முடித்ததும் ''இனிச் சாமிகும்பிடப்போறோம்'' என்று சொல்கிறார். எல்லோரும் தங்கள் தங்கள் சமய முறைப்படி வணங்குகிறார்கள். அவர்கள் முன் தேவதை தோன்றி நடனமாடுகிறது.

## காட்சி—4

சுவானோ என்ற இளம்பெண் தனியே ஆடிப்பாடி மகிழ்ந்து கொண்டிருக்கிறாள். திடீரென ஆடுவதை நிறுத்தி, தரையில் அமர்கிறாள். இடுப்புக்குக் கீழே, உடைகளில் இரத்தம் வழிவதை பார்த்து பயந்துபோய் அலறுகிறாள். அழுகிறாள்.

இவளின் சத்தம் கேட்டு தாயார் ஓடி வருகிறார். மகள் பெரியவளானதை யறிந்து சந்தோசப்படுகிறாள். தனது சேலையை மகளுக்கு அணிவிக்கிறாள். பிறகு ஏனைய குடும்பங்களுக்கும் செய்தியைத் தெரிவிக்கிறாள். பூசாரியை அழைத்துவர ஆள் போகிறது.

பூசாரியார் தனக்குள் கதைத்தபடி, தடியூன்றி வருகிறார். பெரியவளான சுவானோவுக்கு சமய முறைப்படி சடங்குகள் செய்து வைக்கிறார். சுவானோ எதுவும் புரியாமல் பயந்து போய் பெற்றோர் சொல்லுக்குக் கட்டுப்பட்டு பேசாமலிருக்கிறாள்.

சடங்கு முடிந்ததும் பூசாரியின் கையாள் கூலி கேட்கிறான். சுவானோவின் தாயார் தன்னிடம் எதுவுமில்லையென்று சொல்ல, அவள் போட்டிருந்த ஆபரணமொன்றை அவன் பிடுங்கிச் செல்கிறான். இதனால் அவர்கள் கோபமடைகிறார்கள்.

இதன் பின்பு சுவானோவின் தாயாரும், இன்னொரு பெண்ணும் தங்களுக்குள் புதுச் சேலைளைப் பரிமாறிக் கொள் கிறார்கள். தாங்கள் பரிமாறிக்கொண்ட சேலைகளைத் தங்கள் உறவினர்களுக்கு காட்டி மகிழ்கிறார்கள்.

சுவானோவுக்கு திருமணம் பேசப்படு கிறது. சேலை பரிமாறிக்கொண்ட பெண்ணும், அவள் கணவனும் தங்கள் மகனை அழைத்து வருகிறார்கள். அவனோ விபரம் புரியாமல் மறுக்க, பெற்றோர் வற்புறுத்தி சம்மதிக்க வைக் கிறார்கள்.

இளைஞன் சுவானோ அருகில் வந்து புல்லாங்குழல் இசைக்கிறான், இருவ ரும் சேர்ந்து நடனமாடுகிறார்கள். அப்போது அவர்களின் குடும்பத்தவர் களும், உறவினர்களும் வந்து ஆடிப் பாடி மகிழ்கிறார்கள். சுவானோவுக்கும் இளைஞனுக்கும் திருமணம் செய்து வைக்கிறார்கள்.

புதுத் தம்பதிகள் குடும்பம் நடத்த ஆரம்பிக்கிறார்கள். சுவானோ முதலில் வெட்கமடைந்தாலும் கணவன் பின்னர் எல்லாம் சொல்லிக் கொடுக்கிறான்.

ஒரு கர்ப்பிணிப் பெண் வருகிறாள். அவன் கணவன் செய்தியறிந்து சந்தோ சப்படுகிறான். உறவினர்களும் மகிழ்ச்சி யடைகிறார்கள். இவர்கள் புதுத்தமபதி களிடம் வருகிறார்கள். சுவானோவும் கர்ப்பமாயிருப்பதை அறிந்து சந்தோசப் படுகிறான்.

**காட்சி—5**

பூசாரி நொண்டியபடி நடந்துவந்து தரையில் அமர்கிறார். தனது ஊனமான காலைப் பார்த்து கவலைப்படுகிறார். அப்போது 3 பேய்கள் வந்து ஆட்டம் போடுகின்றன. பூசாரியின் கைத்தடி யைப் பறித்து எறிகின்றன. அவரின் தட்டைத் தூக்கி வீசுகின்றன. பூசாரி மிரண்டுபோய் அழுகிறார்.

திடீரென ஒரு பேய் தன்து தலையி லிருக்கும் முடியைக் கழற்றி பூசாரியின் தலைக்கு சூட்டப் போவதுபோல் ஏமாற்றிக் கொண்டிருக்கிறது. பூசாரி பயம் நீங்கி வியப்படைகிறார். பேய்கள் அவரை ஆற்றின்மீது நடந்துவரச் செய் கின்றன. அப்படி அவர் நடந்து வரும் போது ஆறு இரத்தமாக மாறுகிறது. இதுவரை பிரகாசித்துக் கொண்டிருந்த சூரியன் மறைந்து கருமை நிறமாகிறது பேய்கள் பூசாரிக்கு முடிசூட்டி விடு கின்றன.

இதனால் மினோகாவா என்ற தீய பறவைக்கு அக்கிராமத்தின் வாசல் களை திறந்துவிட பூசாரி சம்மதிக் கிறான்.

அப்போது அந்த வழியாய் வந்த சுவானோ பூசாரியின் துரோகத்தைக் கண்டு அலறியபடி ஓடுகிறாள். பூசாரி மினோக்காவாவுக்கு கீழ்படிந்த திருப்தி யில் பேய்கள் மறைகின்றன.

பூசாரி தன்னுடைய ஊனமான கால் குணமானதை அறிந்து சந்தோசப்பட்டு ஆர்ப்பரிக்கிறார். காலைக் குணப் படுத்திய மினோக்காவாவுக்கு நன்றி சொல்கிறார். பிறகு ஏதோ ஒரு திட்டத் துடன் கைத்தடியை எடுத்துக்கொண்டு நொண்டுவதுபோல் பாசாங்கு செய்த படி நடக்கிறார்.

## காட்சி-6

தங்கள் தங்கள் பிரசவங்களைப் பற்றிக் கதைத்தபடி கர்ப்பிணிப் பெண்கள் நடந்து வருகிறார்கள். அவர்கள் நடந்து வரும்போது ஆறு இரத்தமாகி யிருப்பதைப் பார்க்கிறார்கள். உடனே அலறுகிறார்கள். பிரசவ வேதனை ஏற்பட்டு துடிக்கிறார்கள். தரையில் விழுந்து புரண்டு அழுகிறார்கள்.

அவர்களுக்கு குறைப் பிரசவமேற்பட்டு குழந்தைகள் இறந்து பிறக்கின்றன. இறந்த குழந்தைகளைப் பார்த்து தாய் மார்கள் மூர்ச்சையடைகிறார்கள். இவர் களைத் தேடிக் கொண்டுவந்த கணவன் மார்கள் இவர்களின் நிலையைப் பார்த்து பதை பதைக்கிறார்கள். எல் லோரும் அழுகிறார்கள்.

## காட்சி—7

பறவைகள் சூழ பிரார்த்தித்துக் கொண் டிருந்த நூனோ என்ற தேவனிடம் சுவானோ இறந்த குழந்தையுடன் வருகிறாள். பறவைகள் இறந்த குழந் தையைச் சுமந்தபடி பறந்து போகின் றன.

பூசாரிக்கு பேய்கள் முடிசூட்டியதைப் பற்றி சுவானோ நூனோவுக்குத் தெரி விக்கிறாள். இதைக் கேட்டு அவர் கவலைப்படுகிறார்.

அழிவுகள் ஆரம்பமாகப் போகின்றன, கிராமத்துக்குள் நுழையப்போகும் மினோக்காவால் சுதந்திரப் பறவைகள் சிறையிடப்படும், துன்பங்கள் வரும் என்று நடக்கப்போவதை நூனோ விபரிக்கிறார். இவற்றை ஊர் மக்க ளுக்கு விளங்கப்படுத்தி பூசாரியின் துரோகத்தனத்தை அம்பலப்படுத்தி, அவர்களை விழிப்பாக இருக்கும்படி சொல்லச் சொல்லி சுவானோவை அனுப்பி வைக்கிறார்.

## காட்சி—8

பிள்ளைகளைப் பறிகொடுத்த பெற் றோர் பூசாரியிடம் பரிகாரம் தேடப் புறப்படுகின்றனர். சுவானோ அவர் களைத் தடுக்கிறாள். பூசாரி துரோகம் செய்துவிட்டதை விபரிக்கிறாள். ஒரு குடும்பம் அதைச் செவி மடுப்பதாக இல்லை. இரண்டாவது குடும்பம் யோசனை செய்கிறது. மூன்றாவது குடும்பத்துப் பெண் பூசாரியிடம் போக மறுக்கிறாள்.

இப்படி இவர்கள் குழம்பிக் கொண் டிருக்கும்பொழுது பூசாரியும் கையாளும் வருகிறார்கள். முதலாவது குடும்பம் உடனடியாக பூசாரிக்கு மண்டியிடு கிறது. பூசாரியைத் தூற்றியபடியே சுவானோ மற்ற குடும்பங்களும் மண்டி யிடாமல் தடுக்கிறாள்.

இரண்டாவது குடும்பம் பூசாரியை நம்புவதா, சுவானோவை நம்புவதா என்று குழம்ப, பூசாரி மினோக்காவின் வலிமையே வல்லது எனத்தான் நிரு பித்துக் காட்டுவதாக சொல்லி தனது குணமான காலை அவர்களுக்குக்காட்டு கிறார். இரண்டாவது குடும்பமும் மண்டி யிடுகிறது.

''அவங்களும் போட்டாங்கள். நாங் களும் போவோம் வா'' என்று மூன்றா வது குடும்பத்தின் கணவர் வற்புறுத்த,

மனைவி மறுக்க, அவர்கள் இழுபறிப் பட்டு, கடைசியில் கணவர் மனைவியிட மிருந்து இறந்த குழந்தையைப் பறித் தெடுத்து பூசாரியின் காலில் விழுகிறார். சுவானோ செய்வதறியாது திகைக் கிறாள்.

### காட்சி—9

நல்ல தேவதை நடனமாடுகிறது. அதை தீயசக்தி வந்து கட்டி இழுத்துக் கொண்டு போகிறது.

### காட்சி—10

பூசாரி நிலப்பாவாடை விரிக்கிறார். மினோக்காவா என்ற தீயபறவையும் அதன் பரிவாரங்களும் ஆரவாரமாக வருகின்றன. மினோக்காவா பூசாரியின் தலையில் இராணுவ இரும்புக் கவசத் தொப்பியைப் போட்டு, கையில் ஆயுத மும் கொடுக்கிறது.

பூசாரி மக்களை மிரட்ட, மக்களிட மிருந்த பொருட்களை மினோக்காவின் பரிவாரங்கள் பறிக்கின்றன பின்னர் அவை வெளியேறுகின்றன.

பூசாரி தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட ஆயுதத்தை மக்களில் ஒருவனிடம் கொடுத்துவிட்டு அரசாளும் ஆசனத்தில் அமர்ந்து கோப்புகளைப் புரட்டிப்பார்க் கிறார். அவரது கையாளும், ஆயுதத்தை வைத்திருந்தவனும் அவருக்கு காவலாக நிற்கிறார்கள்.

மக்கள் மிகவும் துன்பப்படுகிறார்கள். அவர்களது பொருட்கள் எல்லாம் பறி போய்விட்டன, அவர்கள் பிச்சையெடுக் கிறார்கள். அதையும் பூசாரியின் கூலிப் படைகள் தட்டிப் பறிக்கின்றன.

தொழிற்சாலைகளில் வேலை இயந்திர மயமாகிறது. தொழிலாளர்கள் பிழியப் படுகிறார்கள். மக்களின் அநியாயச் சாவுகளையும், பரிதாபத்தையும் உணர்ந்த ஒரு தொழிலாளி கொதித் தெழுகிறான். அநியாயத்திற்கெதிரா கக் குரல் கொடுக்கிறான்.

கோப்புகளைப் புரட்டிப், புரட்டி பார்த் துக் கொண்டிருந்த பூசாரியின் காதில் இது விழுகிறது. உடனே தனது கூலிப் படைகளை ஏவிவிடுகிறான். அவர்கள் அந்த தொழிலாளியை இழுத்து வந்து சித்திரவதை செய்து கொல்கிறார்கள்.

இவற்றைப் பார்த்துக் கொண்டிருந்த இன்னொரு தொழில்ாளி இரகசியமாக மக்களை அணி திரட்டுகிறான். அவர் களுக்கு புத்துணர்ச்சியூட்டுகிறான். அநியாயத்திற்கெதிரான குரல்கள் பலமடைகின்றன.

பூசாரி மினோக்காவுக்கு அழைப்பு விடுக்கிறான். மினோக்காவா வருகிறது மக்களை இராணுவத்தில் சேரும்படி அழைப்பு விடுக்கிறது. அவர்கள் மறுக்க பலாத்காரமாக இழுத்து வந்து பயிற்சி கொடுத்து இராணுவ மயமாக்குகிறது. பூசாரியாலும், மினோக்காவாலும் பலர் இராணுவமயமாகிறார்கள்.

பூசாரியும், மினோக்காவாவும் தாங்கள் உருவாககிய இராணுவப் படையை மக்களைக் கொல்ல அனுப்புகிறார்கள். அநியாயத்திற்கெதிராகக் குரல் கொடுப்பவர்கள் இராணுவத்தால் கொல்லப்படுகிறார்கள். இராணுவத் திலும் சாகிறார்கள்.

## காட்சி—11

நூனோ வந்து கொல்லப்பட்ட மக்களை பார்த்து அழுகிறார். இந் நேரத்தில் கலைஞர்கள் ஒவ்வொருவராக வந்து தங்கள் நாடுகளைப் பற்றிச் சொல் கிறார்கள். முதலில் இலங்கையர் வந்து ''ஈழத் தமிழர்களின் சுயநிர்ணய உரிமைப் போரில் உயிர்நீத்த அனை வருக்கும் கண்ணீர் அஞ்சலிகள்'' என்று தமிழில் சொல்லிவிட்டு ''எங்க ளது நாட்டில் சாப்பிடுவதற்காக மட்டுமே மக்கள் வாயைத் திறக்கிறார் கள். அங்கு மனித உரிமைகள் முற்றாக நசுக்கப்படுகிறது. இலங்கை'' என்று ஆங்கிலத்தில் சொல்கிறார்.

இலங்கையர் தனது நாட்டு நிலைமை யைச் சொன்னபின் தனதிடத்திற்குப் போய் உட்காருகிறார். தொடர்ந்து ஏனைய நாட்டவர்களும் வந்து முதலில் தங்கள் மொழியிலும் பின்னர் ஆங்கிலத் திலும் விபரிக்கிறார்கள்.

பாகிஸ்தானியர்: எங்களது மொழியான பஞ்சாபிக்கு நாட்டில் உரிமையில்லை. ஒரு இனத்தின் அரசு ஏனைய இனங் களை ஒடுக்குகின்றது. எல்லா இனங் களுக்கும் சமமான உரிமைகள் கிடைக் கும் வரை போராடுவோம்.

இந்தியர்: அமெரிக்க ஏகாதிபத்தியத் தால் போபாலில் விசவாயுக் கசிவு ஏற் பட்டு ஏராளமான அப்பாவிப் பொது மக்கள் அநியாயமாகக் கொல்லப்பட் டார்கள். எங்கள் நாட்டில் இனியும் இப்படியான உயிர் கொல்லும் தொழில் நுட்பங்கள் வேண்டாம்.

இந்தோனேசியா: எங்கள் நாட்டில் அடக்கப்படும் மக்கள் உரிமை பெறும் வரை போராட்டம் ஓயாது.

மலேசியர்: 1987இல் நடைபெற்ற படுகொலைகள் போல் இனியும் நடக்க அனுமதியோம்.

தாய்லாந்தர்: விவசாயிகளுக்கு மண் வேண்டும். மக்களுக்கு நிலம் வேண்டும். எங்கள் மண் விவசாயிகளுக்காகவும், மக்களுக்காகவும் இல்லை. அவற்றைப் பெறும்வரை போராடுவோம்.

ஒஅரியோஆ: எங்கள் நாட்டின் பெயர் உங்களில் பலருக்கு தெரிந்திருக்காது. 1840ஆம் ஆண்டு வெள்ளைக்கார காடையர்களால் எமது நாடு பறிக்கப் பட்டது. எங்கள் நாட்டின் பெயரை நியூசிலாந்து என்று அவர்கள் மாற்றிக் கொண்டார்கள். எங்கள் விவசாயத்தை மீன் பிடியைக் கைப்பற்றினார்கள். கலாச்சாரத்தை அழித்தார்கள். மௌரி இனமாகிய நாங்கள் பறிக்கப்பட்ட வற்றை மீட்டெடுக்கும் வரை போராடு வோம்.

யப்பானியர்: இன்னுமொரு கெரோ ஷிமா இன்னுமொரு நாகசாக்கியா யப்பானில் மட்டுமல்ல உலகில் எங்குமே வேண்டாம் அணு ஆயுதங்கள்.

தென்கொரியர்: 40 வருடங்களாக நாங்கள் ஒடுக்கப்பட்டு வருகிறோம். 88ஆம் ஆண்டில் பல மாணவர்கள் கோரமாகப் படுகொலை செய்யப்பட் டார்கள். எங்களுக்கு விடிவு வரும் வரை போராடுவோம்.

பிலிப்பைன்சியர்: அடக்கப்பட்டு ஒடுக் கப்பட்டு வரும் அனைத்து மக்களுக்கா கவும் நாங்கள் அனைவரும் ஒன்றி ணைந்து போராடுவோம்.

## காட்சி—12

மக்கள் எல்லோரும் ஒன்று சேர்கிறார்கள். தேவனால் அவர்கள் அனைவருக்கும் ஆயுதம் விநியோகிக்கப்படுகிறது. மக்கள் தங்களுக்குள் ஆயுதங்களைப் பறிமாறிக் கொள்கிறார்கள்.

## காட்சி—13

முதலில் பூசாரியுடனும், அவருடைய கூலிப்படைகளுடனும் மக்கள் மோதுகிறார்கள். ஆண்கள், பெண்கள், பல இனத்தவர்கள், வேறுபட்ட மொழியினர் எல்லோரும் ஒன்றாக இணைந்து தாங்கள் இழந்தவற்றுக்காகப் போராடுகிறார்கள். பல மக்கள் களத்திலே வீரமரணமடைகிறார்கள். பூசாரி மக்களால் கொல்லப்படுகிறார்.

இறுதியில் மினோக்காவா தனது படைகளுடன் வருகிறது. மக்கள் தொடர்ந்து தீரமுடன் எதிர்த்துப் போராடுகிறார்கள். பலத்த இழப்புடன் மினோக்காவும், அதன் பரிவாரங்களும் அழிக்கப்படுகின்றது. மக்கள் ஜெயிக்கிறார்கள்.

கருமை மறைந்து, மறுபடி சூரியன் தோன்றிப் பிரகாசிக்கிறது.



ஜெயமோகனின் 'சிதை' நாடகத்தைப் படித்து கடுமையான அதிர்ச்சியும் வருத்தமும் அடைந்தேன். தொழு நோயாளிகளுக்கு நீங்கள் செய்திருக்கும் அநீதி சகிக்க முடியாததாயிருக்கிறது. வெகு காலமாக அவர்களை சமூகம் மிகக் கொடிய முறையில் நடத்திவருகிறது. அவர்களுக்கு எதிராக அவிழ்த்து விடப்பட்ட புனைவுகளுக்கு அளவே கிடையாது. ''தொழுநோய் பாலுறவு நடத்தை காரணமாகவோ வேறு பழக்கவழக்கங்களாலோ ஏற்படுவதல்ல. அது தற்செயலானது. தொழுநோய் தொற்று நோயல்ல. தொழுநோய் முற்றிலும் குணப்படுத்தக் கூடியது'' இந் நிலையில் உங்கள் தத்துவ விசாரங்களுக்கு அவர்கள் நிலையை உபயோகிப்பது எவ்வளவு அசிங்கம். தொழுநோய் தவிரவும் நாடகத்தில் மனிதர்கள் குறிப்பாக பெண்கள் எவ்வளவு தட்டையாக, பரிமாணங்களின்றி இருக்கிறார்கள்? இறுதியாக 'சிதை' நாடகமா?

ராஜன் குறை

ஜெயமோகனின் பதில்

சற்று அதீத கோபத்துடனும், அதன் விளைவான முன் முடிவுகளுடனும் நண்பர் கடிதம் எழுதியிருக்கிறார். ஆயினும் அந்த கோபத்துக்கு பின்னாலிருக்கும் நியாயம் என்னையும் வருத்தமுறச் செய்கிறது,

தொழுநோய் குணப்படுத்த இயலாதது, தொற்றுவது. கீழானது முதலிய எந்த அபிப்பிராயங்களும் நாடகத்தின் மூலம் முன் வைக்கப்படவில்லை. நோயாளியிடம் பிறர் நடந்துகொள்ளும் முறை மட்டுமே நாடகத்தில் உள்ளது. அதில் இன்னும் எவ்வித மாற்றமும் இல்லைதான். எனது இளமைக்கால மனப் பதிவு ஒன்றின் விளைவு இக்கதை. கதையமைப்பை நிஜத்தை ஒட்டியே அமைத்தேன். குறிப்பிட்ட நபர் இளமையில் தறிகெட்டு வாழ்ந்தவர் என்றும் அவரது நோய் அதன் விளைவே என்றும் கூறப்பட்டது. அதற்காக அவரும் கடும் குற்ற உணர்வு கொண்டிருந்தார் அவரை அவர் குடும்பத்தினர் நடத்திய விதத்தைக் கண்டு மனம் பாதிப்புற்ற நான் இவ்வுறவுகளுக்காக அவர் ஏன் தன் இளமை சந்தோஷங்கள் பற்றி குற்றஉணர்வு

□ சென்னையில் Phycare என்ற அமைப்பு டாக்டர் ருத்ரனின் இயக்கத்தில் மனநோய்க்குட்பட்டு மீண்டவர்களைக் கொண்டு மியூசியம் தியேட்டரில் மே 6-ல் ஒரு நாடகத்தை நிகழ்த்தியது. அசோகமித்திரனின் காத்திருத்தல் சிறுகதையைத் தழுவி அமைக்கப் பட்ட நாடகம். அவர்களைப் பற்றி சமூகம் கொண்டுள்ள தவறான கண்ணோட்டத்தை நீக்கி அவர்களும் சிறப்பாக செயல்படமுடியும் என்பதை விளக்குவதற்காக போடப்பட்டது. அவர்களும் தேர்ந்த கலைஞர்களைப் போன்று casual ஆக நடித்து அதை நிரூபித் தார்கள்.

□ மதுரையில் புதிதாக அமைக்கப்பட்டுள்ள ஒத்திகை நாடகக் குழு ஏப்ரல் 18ல் சீத்தாராம் குப்தா அரங்கில் விஜய்தெண்டுல்கரின் 'அமைதி! அமைதி! கோர்ட் நடைபெறுகிறது' நாடகத்தை சிறப் பாக மேடையேற்றியது. இயக்கம் சுபகுணராஜன்.

□ பாண்டிச்சேரி சங்கரதாஸ் சுவாமிகள் நிகழ்கலைப்பள்ளி பிரபஞ் சனின் அகலிகை நாடகத்தை அ. ராமசாமியின் இயக்கத்தில் மே 12ல் கம்பன் கலை அரங்கில் நிகழ்த்தியது. கம்பன் விழாவின் இறுதி நிகழ்ச்சியான இந்த நாடகத்தை இரண்டாயிரத்துக்கும் மேற்பட்டோர் பார்த்தனர். நாடகத்தின் முடிவில் புதுமைக்கு வழி விடுவதாக கம்பன் விழாத் தலைவர் தெரிவித்தார்.

---